உ

சிவமயம்.

ஸ்ரீராமேச்சுரமென்னும்

# சேதுஸ்தலபுராண

## வசனகாவியம்.



இஃது,

இராமேச்சுரம்

ஆறுமுக உபாத்தியாயரவர்களுடைய

எட்டுப்பிரதியின்படி



மதுரை புதுமண்டபம், புத்தகஷாப்,

நாகலிங்கம்பிள்ளை அவர்களால்

பரிசோதிக்கப் பட்டதை



ஷை யார் குமாரர்

மதுரை புதுமண்டபம் புக்ஷாப்

என். செல்லய்யாபிள்ளை அவர்களால்




சென்னை,

ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ்ஸில்

பதிப்பிக்கப் பெற்றது.



ரிஜிஸ்டர் காபிரைட்.

கன் விலை] 1926. [ரூபா 2—0—0






உ

கடவுள் துணை.

ராமேச்சுர தீர்த்தங்களில்

# ஸ்நானஞ் செய்யவேண்டிய வரிசைக்கிரம விபரம்.

1—வது விநாயகர் தெரிசனம்.

தேவிபட்டணத்துக்கு வடக்கு உப்பூரில் விநாயகர்தெரிசனை செய்யவேண்டியது தேவிபட்டணத்துக்கு பத்துமயில் வடக்கிலிருக்கின்றது.

2—வது நவபாஷாண தீர்த்தம்.

தேவிபட்டணம் நவபாஷாண சமுத்திரத்தில் ஸ்நானஞ் செய்யவேண்டியது இராமநாதபுரத்திற்கு ஒன்பதாவதுமைல் வடக்கிலிருக்கின்றது.

3—வது சக்கரதீர்த்தம்.

தேவிபட்டணத்தில் தரும புஷ்கரிணியென்ற சக்கரதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யவேண்டியது. இந்தத் தீர்த்தத்தில் ஒளித்துக்கொண்ட மகிடாசூரனை அசரீவாக்கால் தேவி தெரிந்து அவனைச் சங்கரித்ததினால் இதற்குத் தேவி பட்டணமென்று பெயருண்டாயிற்று.

4—வது சக்கர தீர்த்தம்.

மேற்படி தீர்த்தத்தில் பாதி திருபுல்லாணியி லிருக்கின்றது சமுத்திரத்தில் சேது அணையுந் தெரிகின்றது. இதிலுஞ் சக்கரதீர்த்தத்திலும் ஸ்நானஞ்செய்து ஆதிகேசவப்பெருமாளை தெரிசனஞ் செய்யவேண்டியது. இத்தீர்த்தத்தில் தருமதேவதைக்குங் காளவ மகாரிஷிக்கும்,உத்தமனுக்கும்,சக்கரத்திற்கும் முத்தியைக் கொடுக்கின்றது. இது இராமநாதபுரத்திலிருந்து தெற்கில் 10-வது மைலில் உள்ளது.

5—வது வேதாளதீர்த்தம்.

வெத்திலைமண்டபத்திற்கு 2-மயிலுக்குத் தெற்கே யிருக்கின்றது. இத்தீர்த்தத்தில் சுதரிசனனென்ற கந்தர்வன் வேதாளரூபம் நீங்கி முத்தியடைந்தது.

6—வது பாபவிநாசதீர்த்தம்.

வெத்திலைமண்டபம் சமுத்திரத்திற்கு அருகில் தெற்கேயிருக்கின்றது. சுமதியென்கிற பிராமண பிரமசாரியுந் திடமதியென்கின்ற சூத்திரனும் முத்தியடைந்தது.

7—வது கபிதீர்த்தம்.

பாம்பனில் தெப்பக்குளஸ்நானஞ் செய்யவேண்டியது.

8—வது வயிரவதீர்த்தம்.

பாம்பனில் சமுத்திரஸ்நானஞ் செய்யவேண்டியது.

9—வது சீதாகுண்டதீர்த்தம்.

தங்கச்சி மடத்துக்கு வடக்கு அரைமயிலி லிருக்கின்றது. தேவேந்திரன் பிர்மஹத்தி தீர்ந்தது சீதாதேவி அக்கினியில் குளித்தவிடம் ஸ்நானஞ் செய்யவேண்டியது.

10—வது வில்லூன்றி தீர்த்தம்.

ஸ்ரீராமர் சீதைக்கு தாகந் தீர்ப்பதற்காகச் சமுத்திரத்தில் வில்லை ஊன்றினவிடஞ் சமுத்திர மத்தியில் நல்லதண்ணீர்க்குமிழியுண்டாயிருக்கின்றது. சீதாகுண்டத் தீர்த்தத்துக்குக் கிழக்கில் தங்கச்சிமடத்தி லிருக்கின்றது.

11—வது மங்கலதீர்த்தம்.

தங்கச்சி மடத்துக்குக் கீழ்ப்புறம் ரஸ்தாவுக்குத் தென்புறமிருக்கின்றது. மனோஜவ பாண்டியனும் அவன் பத்தினி சிமித்திரையும் மகன் சந்திர காந்தனும் இராச்சியபாரம் பெற்று முடிவில் மோட்சமடைந்தது.

35/2



12—வது இரணவிமோசனதீர்த்தம்.

ஷே ரஸ்தாவில் ஏகாந்த இராமசாமி கோவிலுக்கு வடபுற மிருக்கின்றது.

13—வது அமுதவாவிதீர்த்தம்.

ஏகாந்த இராமசாமி கோவிலுக்குள் ஈசானிய திக்கிலிருக்கின்றது. ஏகாந்த இராமசாமி கோவிலானது ஸ்ரீராமர் இலக்ஷ்மணர்-விபீஷணர்-அநுமார்-சுக்ரீவன் முதலானவர்களுடன் இலங்கைக்குச்செல்லும் விஷயமாக ஏகாந்தமா யிருந்து பேசுகையில் சமுத்திர கோஷ்டமானது பேசவொட்டாமல் இரைந்ததினல் ஸ்ரீராமர் கையை யமர்த்த சமுத்திரமானது சப்தமில்லாமல் இன்று மிருக்கின்றது.

14—வது இலக்ஷ்மணதீர்த்தம்.

ஸ்ரீராமேஸ்வரத்தில் பாம்பன் ரஸ்தாவுக்குத் தென்புறமிருக்கின்றது. பலபத்ரர் சூத புராணிகரைக் கொன்ற பிர்ம்மஹத்தி தோஷமும் இராட்சதர்களைக் கொன்ற தோஷமும் நிவர்த்தியாயினது. இதிலிருந்து தான் தற்காலம் யாத்திரை ஆரம்மஞ்செய்யப்படுகிறது.

15—வது ஸ்ரீராமதீர்த்தம்.

இலக்ஷ்மண தீர்த்தத்துக்குக் கிழக்கிலிருக்கின்றது. சுதிக்கனனென்ற பிராமணன் தீர்த்தமாடி மானிடதேகத்துடன் தேவ போகமடைந்ததுந் தருமராஜாவானவர் அசுவத்தாமா இறந்துவிட்டதாய் பொய்சொன்னதினு லுண்டான குருஹத்தி தோஷமும் போய் ராஜ பட்டாபிஷேகம் பெற்றுக்கொண்டது.

16—வது சேது தனுக்கோடி தீர்க்தம்

இரத்னகரமும் மகோததியும் ஒன்ருகக்கூடிய இடம்மகாசமுத்திரஸ்நானம் அசுவத்தாமா நித்திரையில் இளம்பஞ்சபாண்டவர்களைக்கொன்ற பாவமுந் தருமகுத்த பாண்டியனுக்குப் பயித்தியமுஞ் சானகாட்டனென்னு முனிவனுக்குங் குபேரன் மந்திரியாகிய பத்திரனென்பவனுக்கும் பராவசு அருவாசு வென்பவன் தகப்பனைக்கொன்ற பிர்ம்மஹத்தி தோஷங்களும் அநேககோடி பாவங்களும் நிவர்த்தியாகின்றது வருகிறவழியில் கோதண்ட இராமசாமிகோயில் தெரிசனை செய்யவேண்டியது.

17—வது ஜடாமகுடதீர்த்தம்.

கோதண்ட இராமசாமி கோயிலுக்கு மேற்கே மணல்மேட்டுக்கு தெற்கே யிருக்கின்றது நல்லதண்ணீர் தெப்பக்குளம் இராம

ரும் இலட்சுமணரும் ராக்ஷஸாளுடைய ரத்தங்கள் ஜடா மகுடங்களிலிருந்ததைகழுவுவற்காகத் தெய்வீகமாயுண்டாக்கப்பட்டது. சுகப் பிர்மரிஷியும் பிருகுமுனிவரும் தூர்வாசரும் தத்தாத்திரேயரும் மோக்ஷமடைந்தது.

18—வது சுக்ரீவதீர்த்தம். அங்கத்தீர்த்தம் சாம்புவதீர்த்தம்.

மூன்றும் கெந்தமாதன பருவதத்துக்குப் போகும் வழியிலிருக்கின்றது.

19—வது பாண்டவதீர்த்தமாகிய தருமதீர்த்தம்.

கெந்தமாதன பருவதத்திலிருக்கின்றது.

20—வது வீம தீர்த்தம்.

கெந்தமாதன ப்ருவதத்திலிருக்கின்றது.

21—வது அர்ச்சன தீர்த்தம்.

கெந்தமாதன பருவதத்திலிருக்கின்றது.

22—வது நகுல தீர்த்தம்.

மேற்படி பருவதத்திலிருக்கின்றது.

23—வது சகாதேவ தீர்த்தம்.

மேற்படி பருவதத்தி லிருக்கின்றது.

24—வது துரோபதி தீர்த்தம்.

ஸ்ரீபத்திரகாளி கோவிலுக்குப் பக்கத்திலிருக்கின்றது.

25—வது பிரம தீர்த்தம்.

ஸ்ரீபத்திரகாளி கோவிலுக்குக் கிழ்ப்புற மிருக்கின்றது.

26—வது பரசுராமதீர்த்தம்.

மேற்படி பிரமதீர்த்தத்துக்கு மேற்புற மிருக்கின்றது.

27—வது அநுமகுண்டதீர்த்தம்.

ஸ்ரீராமநாதசுவாமி கோவிலுக்கு வடபுறமிருக்கின்றது.

28—வது அகஸ்தியதீர்த்தம்.

ஸ்ரீராமநாதசுவாமி கோவிலுக்கு ஈசானதிக்கிலிருக்கின்றது.

29—வது அிகினி தீர்த்தம்.

ஸ்ரீராமநாதசுவாமி கோவிலுக்கெதிரே சமுத்ரஸ்நானம்.

30—வது நாக தீர்த்தம்.

ஸ்ரீராநாதமசுவாமி கோவிலுக்கு ஈசானதிக்கில் தேவஸ்தானம்மடத்துக்குள் ளிருக்கின்றது.

31—வது சேதுமாதவ தீர்த்தம்.

ஸ்ரீராமநாதசுவாமிகோவிலுக்குள் மூன்றும்பிராகாரத்திலிருக்கின்றது தெப்பகுளம்.

32—வது நளன்தீர்த்தம்.

சேதுமாதவர் கோவிலுக்குள் ளிருக்கின்றது.

33—வது நீலன் தீர்த்தம்.

சேதுமாதவர் கோவிலுக்குள் ளிருக்கின்றது.

34—வது கவி தீர்த்தம்.

மேற்படி கோவிலுக்குள் ளிருக்கின்றது.

35—வது கவாட்சி தீர்த்தம்.

சேதுமாதவர் கோயிலுக்குள் ளிருக்கின்றது.

36—வது கந்தமாதன தீர்த்தம்.

மேற்படி கோவிலுக்குள் ளிருக்கின்றது.

37—வது பிர்மஹத்தி விமோசனதீர்த்தம்.

கோவிலுக்குள் இரண்டாம் பிரகாரத்திலிருக்கின்றது.

38—வது சூரிய புஷ்கரிணிதீர்த்தம்.

மேற்படி கோவிலுக்குள் இண்டாம்பிரகாரத்லிருக்கின்றது.

39—வது சந்திரபுஷகரிணி தீர்த்தம்.

மேற்படி கோவிலுக்குள் ஷை பிரகாரத்திலிருக்கின்றது.

40—வது முத்தீர்த்தம்.

கங்கா, யமுனா, கயா ஷை கோவிலுக்குள்ளிருக்கின்றது.

41—வது சங்க தீர்த்தம்.

மேற்படி இண்டாம் பிரகாரத்திலிருக்கின்றது.

42—வது சக்கர்தீர்த்தமாகிய முனிதீர்த்தம்.

மேற்படி பிரகாரத்திலிருக்கின்றது.

43—வது காயத்ரி சாவித்ரிதீர்த்தம்.

அனுமார் கோவிலுக்கு மேற்புரம் சத்திகொல்லையி லிருக்கின்றது.

44—வது மகாலக்ஷ்மி தீர்த்தம்.

அனுமார் கோவிலுக்குத் தென்புறம் தெப்பக்குளம்.

45—வது சிவதீர்த்தம்.

கோவிலுக்குள் நந்திகேஸ்வருக்கு தென்புறம்தெப்பகுளம்.

46—வது சாத்தியாமூர்த தீர்த்தம்.

அம்மன் கோவிலுக்குள்ளிருக்கின்றது.

47—வது சர்வதீர்த்தம்.

ராமநாதர் சந்நிதிக்கு முன்னிருக்கின்றது.

48—வது கோடிதீர்த்தம்.

கோவிலுக்குள் முதற்பிராகாரத்தில் ஸ்ரீகாசி விஸ்வநாதர் கோவிலுக்கு வடபுறமிருக்கின்றது கடைசி ஸ்நானஞ் செய்து தீர்த்தம் கட்ட வேண்டியது.

49—வது சாக்ஷிக்கணபதி தெரிசனை.

இராமேஸ்வரம் ரஸ்தாவில் காட்டுபிள்ளையார் கோவிலென்ற சாக்ஷிவிநாயகர் தெரிசனை செய்யவேண்டியது.

சகல தேசங்களிலுஞ்செய்த பாபநிவர்த்திக்காக ராமேஸ்வரம்வந்து தீர்த்தமாடியபின் அந்த க்ஷேத்திரத்திற்செ மலமூத்திர உச்சிட்ட பாபநிவர்த்திக்காக மேற்படி விநாயகர் தெரிசனம் அவசியம் செய்யவேண்டியது.

**தீர்த்தங்களின் வரிசைக்கிரம அட்டவணை**

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

## ஸ்ரீராமேச்சுரமென்னும்

# சேதுஸ்தலபுராண வசனகாவியம்.



### விநாயகர் தோத்திரம்.

திங்களங்குழவியெண்ணத் திகழொருமருப்பிற்சோதி
தங்குகிம்புரிவயங்கத் தடாமணிமகுடந்தாங்கித்
துலங்கநல்வரங்கணல்குந் தூயசீரிராமசேதுப்
புங்கவர்வணங்கும்யானை முகத்தனைப்போற்றல்செய்வாம்.

### இராமநாதசுவாமி.

பூமலியிதழிசூடும் புதுநிலாமகுடவேணி
நாமலிசுருதிபோற்றும் நம்பிரானிராமநாதன்
யேமலிசிலையிராமர்க் கிராவணன்பிரமகத்தி
தீமலியிடுக்கந்தீர்த்த சேவடிசென்னிவைப்பாம்.

பூந்தவிசினிருந்தபிரான்முதலோர்காணப்
புண்டரிகமகள்கொழுநன்புகழிலங்கை
வேந்தனுயிர்ப்பழிகழுவுமுகத்தால்யார்க்கும்
விடையவனேவுடையவனும்வேதவாய்மை
யாந்தரங்கம்வெளிசெய்வானனைவரோடு
மணைந்துகந்தமா தனத்திலருச்சித்தேத்து
யேந்துபுனற்சடிலமுடியிராமநாத
னிணையடிச்செந்தாமரைகளிறைஞ்சிவாழ்வாம்.

### ஸ்ரீ பர்வதவர்த்தனியம்மன்.

தண்ணெனவும்வெச்செனவுந்துசாயாத்
தகைபயின்றுவிடநீக்கித்தலைவற்கென்று
முண்ணமுதந்தனையுதவியிமயமேரு
வுயர்சிகரமந்தரத்தையொருவிச்சேர்ந்து
கண்ணுதலைவிளர்ப்புறலாற்கயிலையெள்ளிக்
கௌணியர்க்குத்தமிழ்சுரக்குங்காட்சியாலே
வண்ணமுலைமலயமலைமானுங்கன்னி
மலைவளர்காதலிமலர்த்தாண்மனத்துள்வைப்பாம்.

## நடேசர்.

பூமாதுபொலிவெய்தமுகுந்தன்காக்கும்
புவிமாதுவளம்பெருகப்புலமைசான்ற
நாமாதுநலந்தழைப்பவிருள்கால்சீக்கு
நகைநிலவுதவழ்மவுலிநன்னீர்க்கங்கை
வாமாதுபுனறுளிப்பமறைகள்வாழ்த்த
வளர்தில்லையம்பலத்துள்வாமநீங்காத்
தேமாதுவிழிகுளிப்பவமரர்போற்றத்
திருநடஞ்செய்நூபுரத்தாள்சென்னிசேர்ப்பாம்.

## கணபதி.

வேணிமதிப்பகிரதிநீர்புழைக்கைவாங்கி
விடுத்தயன்வெண்டலையுருட்டிமிளிர்வெண்கோட்டாற்
கோணிணையமதிக்குழவியுழுதுமேருக்
கொடுமுடியிற்கிளைத்தவெண்டோள்குழையத்தாக்கித்
தாணெடியவிடைமுனிந்துகயிலைமுக்கட்
டாதையோடும்விளையாடித்தன்பாலன்பர்
மாணிலவுமனத்தறிநின்றுலாவுந்தெய்வ
வாரணத்தைநினைந்திறைஞ்சிவழுத்தல்செய்வாம்

## சிவசுப்பிரமணியக்கடவுள்.

குலவுமலைமகள்கலச முலைப்பால்வாசக்
குமுதமவள்கொழுநர்மறைகொழிக்குஞ்செவ்வி
நிலவுமுகமலர்கமழச்செய்துமுன்னே
னெடுந்துளைக்கைபிடித்தெறிநெற்றிப்பட்டத்
துலவியிவரொருமூவருவப்பமாலோ
டும்பர்கணங்களிதூங்கவுலகமூடுங்
கலபமரகதமயிலூர்கழற்கால்வென்றிக்
கந்தனைவந்தனைசெய்துகருத்துள்வைப்பாம்.

## கலைமகள்.

கவளமதகரியுரிவைப்போர்வைமூடுங்
கண்ணுதலோன்புகழ்விரிக்குங்கலைகள்யாவும்
பவளவிதழ்ப்பசுங்குதலைமொழியிற்காட்டும்
பைந்தோடியையந்தண்ன்றேயப்பருமவல்குற்

றுவளருமணிமருங்குவிளஙிலவெண்மூரற்
சுந்தரியைவெண்கமலத்தோட்டுவெட்டத்
தவளமதிநடுமெவர்வாலெகினம்போலுந்
தையலைமையலையகற்றித்தாளிற்றூழ்வாம்.

## நந்திதேவர்.

போதனுறைமலர் முகிழாதமரர்கோமான்
புரநிலைமைகுலையாதுமருதுபோழ்ந்த
பாதனுறைகடல்சுருங்காதரிணஞ்சூரல்
படைமழுவண்சுரிகைகரம்பரித்துப்பாந்தட்
காதனுறைசிதறுபுனற்கங்கைசூடுங்
கண்ணுதலெம்பரன்மதியுங்கதியுநல்கு
நாதனுறைதிருக்கயிலைகாவல்பூண்ட
நந்தியைநம்புந்தியின்கணயந்துவாழ்வாம்,

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்.

சங்கமணிக்குழைதயங்கத்தழைந்தகாதுந்
தனிவிடையுமுதல்பலதணப்பில்காட்சி
பொங்குமடையாளங்கள்புகன்றுபோற்றிப்
பொருவிறந்தபரஞ்சுடரைப்புந்திக்கெட்டா
வங்கணனைவழுதியுடல்வெப்பநீங்க
வணிதிகழ்வெண்டிருநூண்டேளள்ளிச்சாத்துஞ்
செங்கைவிரல்கொடுகுறித்தெரிக்குந்தோன்றல்
சிற்றடியின்பெருந்தகையைச்சிந்தைசெய்வாம்.

## திருநாவுக்கரசுநாயனர்.

தேவரையுமுனிவரையுந்துளவமார்பிற்
றிருவரையுங்குரவரையுஞ்செல்வமிக்கோர்
யாவரையுமேவல்கொளுநெற்றிநாட்டத்
திறைவரைமுன்னிகந்திருந்தவெண்ணந்தோன்றச்
சேவரையுநெடுங்கொடியின்தகைமையெல்லாத்
திசைவரையுஞ்செலத்தமிழின்செய்யுள்பாடு
நாவரையபங்புகழ்மொழிகள்வரைந்துகூறி
நயந்தவர்செய்திருத்தொண்டுவியந்துவாழ்வாம்.

## சுந்தரமூர்த்திநாயனர்.

தாதுகொண்டமலர்ச்சுரியற்பரவையென்பா
டனத்திணைமேன்மயற்குளிரின்றளர்வுதீர

வேதுகொண்டுவிளையுநெறிவிரும்பிமாலும்
விரிஞ்சனுமுன்றேடாதவெளியையாரும்
யாதுகொண்டுமறிவரிதாயெங்குமான
விரும்பொருளைநெருங்குமிருனிரவின்மீளத்
தூதுகொண்டார்தமையெமையாட்கொள்வீரென்று
சொல்லியவர்பதம்புல்லித்தொழுதல்செய்வாம்.

## மாணிக்கவாசகசுவாமிகள்.

செழியர்குலபதிகொடுத்தமாடுகொண்டு
சென்றுதிருப்பெருந்துறையிற்செறிந்தசம்புப்
பழிவிரவுபரித்திரள்கொண்டணைந்துமாறன்
பணித்தவிடற்கிரங்கியருள்பாடிப்போற்றி
வழியமுதகிரணநிலாமகுடமீதே
மதுரையமர்பரம்பரனைவந்திக்காகச்
சுழிபெருகுபுனற்றரங்கவைகைவாய்மண்
சுமப்பித்தார்பதந்தலைமேற்சுமத்தல்செய்வாம்.

## சண்டேசுரநாயனுர்.

மதனுதிகளுக்கெட்டாதபரமானந்த
வாழ்வினையங்கோரிலக்கமனலார்கூப்பித்
தனதிதயந்தனினின்றுந்தாபித்தான்பா
றழைத்தவன்பாலாட்டவந்துதடுக்கத்தாதை
யேனுதவன்றனிருபதமுமழுவாற்றுண்டித்
திகழ்ந்தவனைப்பரபதத்துளிருத்தித்தானும்
பினுகியருளடைந்தவிறற்சண்டேசன்றூள்
பிரசமலரிறைத்திறைஞ்சிப்பேசுவாமே.

## மெய்கண்டதேவநாயனுர்.

அல்லாதபரசமயவலகைத்தேர்வின்
டகலவகல்புனற்பெண்ணையயள்சூழ்வெண்ணெய்ப்
பொல்லாதவிபமுகத்துப்புத்தேடென்பாற்
புனிதசிவாகமப்பொருண்மைபொருந்தவாய்ந்து
நில்லாதநிலையிதுமற்றென்றுமொன்றாய்
நிற்குநிலையிதுவெனமெய்ந்தெறிதேர்ந்தியாரும்
வெல்லாதசிவஞானபோதஞ்சொன்ன
மெய்கண்டான்சரணமுடிமீதுகொள்வாம்.

## திருத்தொண்டர்.

முன்னடையவரியசிவமுத்திபெற்றோர்
மூதுலகிலதுவிரும்பிமுயலாநின்றோர்
பின்னடையவருமவர்கண்முதலாயுள்ள
பிள்ளையிளவெள்ளைமதிபிறங்குவேணி
மின்னடையுமணிமௌலிவேதகீதன்
வெண்ணீறுங்கண்டிகையுமெய்விடாமற்
றன்னடைநன்னெறிதம்மையடைந்துளர்க்குந்
திருத்தொண்டர்பெருந்தொண்டுதலைமேற்கொள்வாம்.

## சிவபக்தர்கள் அடையும் புண்ணியபலன்.

கண்ணுதலாலயநோக்குங் கண்களேகண்கள்
கறைக்கண்டன்கோயில்புகுங்கால்களேகால்கள்
பெண்ணொருபாகனைப்பணியுந்தலைகளேதலைகள்
பிஞ்ஞகனைப்பூசிக்குங்கைகளேகைகள்
பண்ணவன்றன்சீர்பாடு நன்னாவேநன்னா
பரன்சரிதையேகேட்கப்படுஞ்செவியேசெவிகள்
அண்ணல்பொலங்கழனிணைக்குநெஞ்சமேநெஞ்சம்
அவனடிக்கீழடிமைபுகுமடிமையேயடிமை.

## நந்தவனம்வைத்தவர்களடையும்பலன்.

தேவதேவன்றனக்கன்பார்சிறப்புமிகுந்தநறுமலர்ப்பூங்
காவைமகிழச்சமைத்தளிக்குங்கருணையுடையோரியாவரவர்
பூவின்மடந்தைகனகமிகப்பொருந்தியுலகினந்தியத்திற்
பாவினிலங்குமுருத்திரர்தம்பதம்பெற்றிருப்பர்பிணியகன்றே.

## சிவபத்தருக்கன்னங்கொடுத்தவர்களடையும்பலன்

நூறுவேதியர்க்கீய்பலநொய்தென
வீதியோங்கிவிளங்குதன்மெய்ம்மையே
யேறுயர்த்தருளெம்பெருமான்புகழ்
கூறும்பத்தருக்கன்னங்கொடுத்தலே.

---

உ

கடவுள் துணை.

சூதபுராணிகர் சௌனகாதிரிஷிகளுக்கு

## புராணம் சொல்லியது,

# நைமிசாரண்ணிய வனச்சிறப்பு

நைமிசாரண்ணிய மென்கின்ற வனத்திலே பிர்மதேவனுடைய பிறப்புகள் கோடியுகங்கள் கண்டவர்களாய் தேவாமிர்தத்தைப் புசித்தவர்களாய்க் காமக்குரோத லோப மோக மதமாச்சரியங்கள் எவ்வளவு மில்லாதவர்களாய் பிர்மசாரி வானப்பிரஸ்தன் சன்னியாசியான பெரியோர்கள் சடைமுடிகளுடனுஞ் சிரமுண்டிதங்களாகவும், மரவுரி கிருஷ்ணஜனம் புலித்தோலாசனம் தெர்ப்பாசனங்களையுடையவர்களாய் பிர்ம்மா, விஷ்ணு, ருத்ரன், மயேசுவரன், சதாசிவன், பராசத்தி முதலான தேவதைகளை உபாசணைசெய்கிறபெரியோர்களாய் சதாகாலம் நாலுவேதம்ஆறுசாஸ்திரம் இருபத்தெட்டுஆகமங்கள் பதினென்புராணங்களை ஒருவர்க்கொருவர் வினவிக்கொண்டும் அதே கவனமாய் பேசிக்கொண்டிருப்பார்கள்.

அப்படி அவர்கள் பேசிக்கொண்டிருக்கிற வேதசாஸ்திரபுராணங்களை கேட்டுக்கொண்டு அந்த வனத்தில் சஞ்சாரம் பண்ணிக்கொண்டிருக்கிற கிளிகள் நாணவந்தான் முதலான பட்சிகள் தங்கள் தாங்கள் சுயபாஷைகளை சுத்தமாய் மறந்துவிட்டு வேதசாஸ்திரங்களைப் பேசிக்கொண்டு அந்தப் பாஷைகளினாலே தங்களுடைய குஞ்சுகளுக்கும் வருத்துவிக்கும், அப்படிக்கொத்த பெரியோர்களும் பட்சிசாதிகளும் பேசப்பட்ட சாஸ்திரங்களையும்வேதங்களையும் அதனுடைய இங்கிதங்களையும் அந்த வனத்திலே சஞ்சாரம்பண்ணிக்கொண்டிருக்கிற காடி, புலி, சிங்கமுதலான மிருகஜாதிகள் கேட்டு ஒன்றுக்கொன்று பகைகள் இல்லாமல் ஒரு கூட்டமாகவும், கூட்டுறவாய் கீரியும், பாம்பும், நாயும், பூனையும், சிங்கமும், யானையும், புலியும், பசுவும் ஒரு துறையிலே தண்ணீர் குடித்து வளர்ந்துகொண்டிருக்கும் வனமெல்லாம் பாரி

ஜாதம், மந்தாரம், புன்னை, வில்வம், சந்தனம், ஆச்சா, தேவதாரம் திருவாத்தி, மகிழம், மா, பலாமுதலான விருக்ஷங்களும், மல்லிகை, முல்லை, இருவாட்சி, செண்பகம், சுகந்தம், துளசி, பாதிரீ முதலான புஷ்பஜாதிகள் நெருங்கிய பூங்காவும் அடிக்கடி தடாகங்களும் குகைகளும் நெருங்கியிருக்குஞ் சந்திரசூரியர் செம்மையாய்ப் பிரகாசிக்கக்கூடாத நெருங்கின சோலைகளாய்த் தெய்வீகமாய் ரமணீகரமாய்ப் பார்க்கப் பதினுயிரங்கண் வேண்டியதாய் ஜெகஜ்ஜோதி நிறமாய்ச் சச்சிதானந்த சொரூபமாய்த் திவ்யவாசனைகளோடு கூடியதாய் எந்த லோகங்களும் எந்த வனங்களும் நிகரிலர்ததாய் சகலமான ரிஷிகள் தபோதனர்கள் எங்கே நிறைந்திருந்தாலும் வந்து கூடுகின்ற இடமாய் எப்போதும் பெரியோர்கள் அவரவர்கள் சிஷர்களுடன் பத்தினிகளுடன் கூடி நெருங்கியிருந்து மூலாதாரஞ் சுவாதிஷ்டானம் மணிபூரகம் அனுகதம் விசுத்தி ஆக்கினையென்று சொல்லப்பட்ட சடாதாரங்களையுஞ் சோதனை பண்ணி இடைகலை பிங்கலை சுழிமுனை மூன்றையும் ஒன்ருகக்கூட்டி பிர்மரந்திர பரியந்தம் மேலே யெழுப்பி துவாத சாந்தத்திலே யிருக்கிற அகண்டாகார சின்மயானந்த சொரூபமாய் சாக்ஷாத்காரத்தைக்கண்டு களிப்புற்று ஆனந்தரசங்களையுண்டு தெவிட்ட யாதொன்றுந் தெரியாமற் சொக்கிப்போயிருக்கிற யோகீஸ்வரர்களும் அக்கினிஹோத்திரயெக்கியங்கள் யாகாதிகள் ஒன்ருெலொன்று குறைவுபடாமல் நிறைவேற்றிக்கொண்டிருக்கிற வானப்பிரஸ்தாளும் ரிஷீஸ்வரர்களுந் தலைகீழாய்ப்பஞ்சாக்கினி மத்தியிலேயும் ஒற்றைக் காலுடனே ஊசிமுனையிலேயும் நிலத்திலே ஒரு கையை ஊன்றிக்கொண்டும் இரண்டு கைகளை ஊன்றிக்கொண்டும் ஒற்றைவிரலை ஊன்றிக்கொண்டுந் தவசுபண்ணப்பட்ட தவசிகளுங்கணக்கு வழக்கு அளவு சங்கையில்லாமல் பெரியோர்களாய் நெருங்கிக் கொண்டிருக்கும்படிக்கொத்த தபோபலங்களாலே பிரமப்பிரளயந்தள்ளி காலாந்திரங்களையுங் கடந்திருக்கிற பெரியோர்கள் நெருங்கின நைமிசாரண்யவனத்தைப் போகவதி பட்டணத்துக்கு அதிகாறியான யமன் ஒரு தூதனையாவது அனுப்பிவைக்க நினைக்கமாட்டான் கண்டிருக்கவுமாட்டான், எல்லாரிஷிகளும் கற்பகோடிகாலங் கண்டவர்களாயிருப்பார்க ளப்படிக்கொத்த நைமிசாரண்யத்திலே சௌனகாதி முனிகள் முதலான பெரியோர்கள் மோக்ஷத்திலேவிருப்பமுள்ளவர்களாயிருபத்தாறுயிரம்பேர்கள் ஒருகூட்டறவாயிருப்பார்கள். அவர்களுடையமாணு

க்கர் சீஷர்கள் அளவிறந்த கோடிபேர்கள் இருப்பார்கள் அப்படிக்கொத்தவர்கள் ஈவரனுடைய பாதாரவிந்தங்களை மானதபூசைகளினாலே அர்ச்சனைபண்ணி வணங்கிக் குற்றமில்லாத புண்ணியகதைகளை ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டிருக்கிற வேளையிலே வேதவியாசருடைய மாணுக்கராகிய சூதமாமுனிவர் அந்த வனத்தை நோக்கி எழுந்தருளிவந்தார். அப்படிக்கொத்த சூதமாமுனிவர் வருகிறதை சௌனகாதி முதலான இருபத்தாறுயிரம் பேர்களான பெரியோர்களுங்கண்டு தீடீரென்று எழுந்திருந்து எதிர்கொண்டழைத்து தெர்ப்பாசனத்தி லெழுந்தருளப்பண்ணி அர்க்யபாத்யங்களளித்து சோடச உபசார பூசனைகளும்பண்ணி வணங்கி நமஸ்காரம்செய்து அநேக தோத்திரங்கள்செய்து சகலமான தீர்த்தங்களையுஞ் சகலமான தவங்களையுஞ் சகலமான க்ஷேத்திரங்களையும் அடைந்தவர்களாய்ச் சந்தோஷங்களையடைந்து ஆனந்தக்கூத்தாடி மகிழ்ந்து சுவாமி சூதமகாரிஷியே? வேதவியாசருடைய அனுக்கிரகத்தினாலே சகலமான சாஸ்திரபுராணங்களைக் கேட்டறிந்து சகலமுந்தெரிந்திருக்கிற மகாமுனியான சுவாமியை இன்றையத்தினம் நாங்கள் கண்டு வணங்க என்ன பூஜாபலம் புண்ணியவிசேஷஞ் செய்திருந்தோமோ தெரியாது, நாங்கள் செய்த தபோபலமே சுவாமியைக்கொண்டுவந்து விட்டது. அடியேங்களுக்கு மனம் குளிரும்படியாய் பிர்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசுவரர் சதாசிவமான ஈசுவரபாதங்களை யடையும்படியான மோக்ஷங்கிடைக்கும்படியாகவுந் தீர்த்தமகிமை மூர்த்திமகிமை ஸ்தலமகிமை இந்த மூன்றும் ஒன்றாய்ப் பொருந்தினதாயுஞ் சகல லோகங்களுக் கன்னியமா யிருப்பதாயும் அரிதானதாகவும் மேலானபுண்ணிய லோகங்களைக்கொடுக்க வல்லமை யுண்டானதாயும் சகல புண்ணிய நதிகளுக்கும் சகல தேவதைகளுக்கும் மேலானதாயும் இந்தப்பஞ்சாசதகோடி பூமண்டலத்திலே எந்தத்தீர்த்தம் எந்தஸ் தலம் மேலானதோ அதை யெங்களுக்குத் தெரியும்படிசொல்லவேண்டுமென்று சௌனகாதிமுனிகள் முதலான பெரியோர்கள் கேட்க சூதமாமுனியும் கேட்டு சந்தோஷத்தையடைந்து பெரியோர்களே நீங்கள் கேட்ட கேள்வி நன்றாய்க்கேட்டிருக்கிறீர்கள். அப்படிக்கொத்த புண்ணிய தீர்த்தமாகிய ஸ்தலங்களுமிருக்கின்றன. அதை முன்னமே சொன்னேன் அப்படிச் சொன்ன புண்ணிய கதைகளிலே வெளிவிடக் கூடாதென்று மறைத்திருந்ததை இப்போது நீங்கள் அபேட்சையாய்க் கேட்டபடியினாலே சொல்லுகிறோம் நீங்களெல்லோரும் ஒன்றாய் ஒரு மன

தாயிருந்து இதுவரையிலே கேட்டிருக்கிற புண்ணிய கதைகளைப் போலே யிதையும் எண்ணிவிடாமல் பயபக்தி விசுவாசத்துடன் அந்தக்கரண சுத்தியாய்வேறே நினைவின்றி கேட்டிருப்பீர்களானால் வேறே புண்ணியம், வேறே தபசு, வேறேயாகம். வேரே மந்திரம், வேறேஜெபங்களும், யாதொன்றும் வேண்டியதில்லை இது அப்படிக்கொத்த புண்ணியகதையாக்கும், இதனுடைய மகிமையை இரண்டாயிரம் நாவைப்படைத்த ஆதிசேஷனாலுஞ் சொல்லமுடியாது நாமுங்கள்பேரிலிருக்கிற வாஞ்சையினாலே சொல்லுகிறோம் கேளுங்களென்றுசூதமகாமுனி நைமிசாரண்யத்திலேசௌனகாதி முனீஸ்வரர்களுக்கு சேதுமகத்துவத்தையுமதின் சார்பிலேயுண்டாயிருக்கிற தீர்த்தமகிமைகளையுங் கெந்தமாதன பர்வத மகத்துவத்தையும் ஸ்ரீராமநாதசுவாமியுடைய கிருபாநந்தங்களையுஞ் சவிஸ்தாரமாகச் சொல்லுகிறோமென்று சொல்லத்தொடங்கினார்.

நைமிசாரணியர் சரித்திரம்.

முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# சேதுபலச்சரித்திரம்.

சேதுஸ்நானம்பண்ணின பேர்களுடையும்

பலனைச் சொல்லுகின்றது.

## சேதுபலச்சருக்கம் ௫௨-ம் செய்யுள்.

இணையசேதுநீ ராடி னுந்தீண்டி னு மிதுகளை யெஞ்ஞான்று
நினைவுசெய்கி னுங் காண்பி னுங்கேட்பி னு நீங்கிடுந் துயரெல்லா
மனையுமத்தனு மாயிடுமாயவ னருள்செயு மச்சேதுத்
தனைநிகர்ப்பதொன் றிலையறந்தவநெறி தழைக்குமந்தணர்காளோ·

மகாமேருவுக்குத் தக்ஷிணபாரிசத்தில் பரதகண்டத்தில் கன்னியாகுமரித்தீவில் கெந்தமாதனகிரிமலைச்சாரலில்லவணசமுத்திரக்கறையில் அயோத்தியாபுரி பட்டணத்து ராஜாவாகிய சக்கரவர்த்தி தசரதமகாராசாவினுடைய குமாரனாகிய ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியால் உண்டாக்கப்பட்ட சேதுவாகிய ராமேஸ்வரத்தில் மகிமைபொருந்தியதீர்த்தங்க ளனேகமுண்டு, அதிலும் மேன்மையானதாய் மோனவானந்த முத்திகளையுங் கொடுக்கபட்டதாய் மகத்துவமுடைய சேதுவென்று சொல்லப்பட்ட தீர்த்தம் ஒன்று அந்தத் தீர்த்தத்தை ஜெனனமெடுத்தவன் கண்ணாலே கண்டால் ஒரு கற்பகோடிகாலம் கைலாசத்திலே அவனுடைய தாயார் தகப்பன் புத்திரமித்திர களத்திராதிகளுடன்கோடி தலைமுறைவரையில்சொந்தமான பேர்களுடன் ஆனந்த போகங்களை யடைந்திருந்து மோக்ஷத்தையு மடைவான். ஆகாசத்திலே யிருக்கிற நக்ஷத்திரங்களை ஒன்றாக வெண்ணினாலு மிந்த க்ஷேத்திரத்தை கண்ணாலே கண்டபேர்களுடைய பலன்களை ஆதிசேடனாலேயுஞ் சொல்ல முடியாது அனேகமான யாகாதி கிர்த்தியங்கள் யெக்கியங்கள் வேள்விகள் யாத்திரைகள் பண்ணிய பலன்களை உடனே கொடுக்கும்யாராவது

ஒருவன் பிறனாகிய ஒருவனை சேதுவுக்குப்போய் ஸ்நானம்பண்ணி வாருமென்று சொன்னாலும் அவன் வாயினாலே சொன்னவுடனே அதுவரையில்செய்த அந்தப் பாவங்களெல்லாமவனை விட்டுநீங்கிக் கிருதார்த்தனாவான் இப்படிக்கொத்த ஒருவனந்தச் சேதுவிலே ஸ்நானம்பண்ணினால் அவனுடைய குலம் ஏழுகோடி தலமுறையிற் செய்த பாபங்களெல்லாம் நீங்கி சாயுஜ்ஜிய பதத்தை யடையும்படியா யிருப்பான். அப்படிக்கு ஸ்நானம் பண்ணின வனந்தச் சேதுக்கரையிலே யிருக்கிற கந்தமாதன பருவதத்தையும் அதில் வாசம் பண்ணுகிற ஸ்ரீராமநாதனையும் அந்தச்சேது தனுக்கோடியையும் எவன் மனத்திலெண்ணி யிருக்கின்றானோ அப்போதே அவன் செய்த பாவமெல்லாம் அதமாய்த் துலைந்து விடுகிறது பின்னு மவனுடைய தாயாதி வழியில் கோடிலக்ஷந் தலைமுறையில் சொந்ததமரோடே மூன்று கற்பகாலஞ் சிவபத மடைவார்கள் பஞ்சமாபாதங்கள் செய்தவர்களா யிருந்தாலும் இந்தச்சேதுவில் விசேஷ தினங்களில் தீர்த்தமாடினால் மூன்று பிரமபட்டம் வரையிலும் வைகுண்ட லோகத்தை யடைத்திருந்து சகல சாம்பிராச்சியத்தை யனுபவிப்பார்கள்.

ஒருநாளும் எப்படிக்கொத்தபாவியும் எமலோகத்திலே யிருக்கமாட்டான். தன் சதையைப் பிடுங்கித் தரமாட்டான், நாயினுடையமாமிசங்களைப் புசியான், மூத்திரங்களையும் நாயின் மூத்திரங்களையும்குடியான் இருப்பு அம்மி ஆட்டுக்கல்,செக்குகளிலே அரையுண்டுஉறைந்துவிழான் புழுவைச் சாப்பிடான்,நெருங்கின இருப்புமுள்ளுகளிலே கேசாதிபரியந்தஞ் சுருக்குச் சுருக்கென்று குத்தாமலிருப்பான் மலஜலவாதிகளை யெடுத்துப் பூசிக்கொள்ளான் கல்மலை அக்கினிமலையிலே அவஸ்தைப்படான், அக்கினிக்குழியிலே குதியான் ரெத்தக்குளத்திலே விழுந்து நீஞ்சான், அக்கினிலேபாய்ந்துகரையோரான், தலைகீழாய் வானவழியிலே தூக்கிடான், காமநீர்களைக் குடியான மலங்களை கட்டியாகச் சாப்பிடான், மேலேயும் பூசிக்கொள்ளான் வாளாயுதங்கத்தி கருக்குவாளாலே துண்டு துண்டாய் யமகிங்கரராலே கட்டுண்டு அறுபடான், வாதநீர் சிலேத்துமநீர் களைப்புசியான், கோழை மூளைகளை விழுங்கான் மலைப்பாம்புகளாலேகடிபடான் காட்டானையின் கால்களாலே மிதிபடான் அதினுடைய கொம்புகளாலே குத்துண்டு வாதைப்படான், காய்ந்துக்கொண்டிருக்கின்ற எண்ணெய்க் கொப்பறையிலே போடப்படான்;காய்ந்துக்கொண்டிருக்கின்ற

எண்ணெய்க் கொப்பறையிலே போடப்படான் எண்ணெய்களை வாங்கிக் குடியான் மலங்களை வாரிவாரிப்போட்டு குத்துண்டு கிடக்கான், கண்ணிலுங் காதிலும் மூக்கிலும் இருப்புச் சிலாக வைத்து சுருக்கென்று குத்துவாங்கான், பத்துக்குறடுகளைக்காயப் போட்டு ஒவ்வொரு எலும்புகளாய்ப் பிடுங்கப்கப்டான், மரத்திலேறி மலமூத்திரக்கிணற்றில் விழான், சூலாயுதம், வேலாயுதம் பதினெட்டு ஆயுதங்களாலே வெட்டிப் பிளந்து சதைசதையாய்ப் பேர்க்கப்பட்டான், இருப்புப் பாசங்களாலே கட்டுண்டுஉருளான், புகைக்குகையிலே யிருந்து வெம்பி மடியான் அக்கினியிலே காய்ந்த இருப்புப் பலகையிலே படுக்கான், ஆண்குறி பெண்குறியிலே தூண்டிகளைப் போட்டுத் தூக்கி அக்கினிக்கு நடுவேகட்டி தூக்கான் இருப்பூசிகளினலே எந்த விடங்களிளும்குத்துண்டுவாதைப்படான் ஈயத்தைக் காய்ச்சி வாயிலும் அபானத்திலும் விட மயங்கி விழமாட்டான் இப்படிக்கொத்த தீமைகளைச் செய்யப்பட்டரௌரவாதி நரகங்களாகிய இருபத்தெட்டுக்கோடி நரகத்திலும் அழுந்தான் இந்தச்சேதுவிலே ஸ்நானம்பண்ணின புண்ணிய தேகத்தையுடையவர்களினது தனுக்கோடியை நோக்கி தீர்த்தமாடப்போகிறேனென்று நூறடிபோய் வந்து விட்டாலும் அவர்களு மிப்படிக்கொத்த யமதண்டனைக்குள்ளாகாமல் சொர்க்காதிபோகங்களை யனுபவிப்பார்கள். ஸ்ரீராமமூர்த்தியாலே கட்டியிருக்கிற சேதுவின் பேரிலே காற்றுவிழுந்து பறக்கிற மணல்கள் தூசிகளின் தொகையெவ்வளவோ அவ்வளவுபாவங்கள் அவ்வளவு ஸ்ரீ ஹத்தி பிர்மஹத்திகள் செய்திருக்கின்ற பாவிகளா யிருந்தாலும் உடனே அவர்களை விட்டு விலகிப்போம் யாவர் சேதுவிலே தீர்த்தமாடுகிறார்களோ அவர்களுடைய சிரசிலே யிருக்கிற கண், காது, மூக்கு. வாய், இவைகளின் வழியே சேது தீர்த்தம் நுழைந்து வந்தால் அப்படிக்கொத்த கண், காது, மூக்கு, வாய், சிரசுகள் தெய்வலோக போகங்களை கற்பகாலங்களிலும் அனுபவித்துக் கொண்டிருக்கும் தங்களுடைய புத்திர பவுத்திராதிகளுடன் தெய்வலோகத்குல் இரண்டாயிர மூவாயிரவருஷம் வாழ்ந்து கொண்டிருப்பார்கள் சேதுவில் விழுகிற காற்று யார்மேலே படுகின்றதோ அவர்கள் சுராபானம்பண்ணி யிருந்து அதினலே நடந்த பாவங்களும் காற்றுடே காற்றுயோடிப்போம் பின்னும் அந்தச் சேதுவில் ஒரு முகூர்த்தம் வாசம்பண்ணிக்கொண்டிருந்து தீர்த்தமாடினல் நானவிதமான பாவங்களும் விலகிப்போம்

வழிமார்க்கத்திலே அடித்துப் பரித்தவன் பெரியோர்கள் பிராமணுள் சிவபூசைகளுக்குத் துரோகம் பண்ணினவன் ராஜர்களுக்குப் பொய்சொன்னவன் சாப்பிடுகிறதே வேலையாக விருந்து சத்கர்மஜெபங்களை விட்டு விட்டவன், வேதசாஸ்திரங்களை விற்றவன், பசுக்களை குதிரைகளை பத்தினியை பிள்ளைகளைவிற்றவன்,தெய்வப்பிராமணுளுக்கு ஒரு பதார்த்தந் தருகிறேமென்று அவருக்கு வாக்கு தத்தம் பண்ணி அப்பால் இல்லையென்று சொன்னவன். அவர்களுக்குக் கொடுத்ததை வாங்கி அபகரித்துத் திரஸ்காரஞ் செய்தவன் சிவபூசை சாதுக்கள் பெரியோர்கள் பூசையிலே கோபித்தவன், விகாதஞ் செய்தவன் பெரியோர் பிராமணுளைக்கொன்றவன், பசுமுதலான சீவன்களை இரை தண்ணீர் குடியாமல் விரட்டினவன் பசித்து வந்தவர்களுக்கு உண்டானதை பருந்து சாப்பிடென்று சொல்லாதவன் எல்லாருஞ் சேதுவில் தீர்த்தபாடினபோதே புண்ணிய புருஷர்களென்று வேத சாஸ்திரங்களாலே சொல்லப்படுகிறது. பின்னும் அக்கினிகோத்திர வேள்விகளுக்கு விகாதம் பண்ணினவன் தேவர்சொத்துக்கள் ஸ்திரீசொத்துக்கள் வெறிபிடித்தவன் சொத்துக்கள் அதிதிகளுடைய சொத்துக்கள் தாசிகளுடைய சொத்துக்கள் இவைகளை விற்று உண்பவன் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் அற்புதமான கந்தமூலபதார்த்தஞ் சந்தனம், கஸ்தூரி, பால், பழம், காய், தினை, சர்க்கரை, தாம்பூலம், பொன், வெள்ளி, தங்கம், முதலானவைகள் பாத்திரம் பட்டுபட்டாவளிகள் இதுகளை அபகரித்துக் கொண்டவன் பெண்சாதிகூடப் பிறந்தவன் சினேகிதனுடைய பெண்சாதி மகன் பெண்சாதி மதுபானஞ் செய்தவள், சூரஸ்திரீ ஈனசாதியாள், பிறருடைய ஸ்திரீ குருபத்தினி தமயன் பெண்சாதி தன் பெண்சாதியைப் பெற்ற மாமியார் பிராமண ஸ்திரீகள் இவர்களைச் சேர்ந்து தோய்ந்தவன் பாவங்களெல்லாஞ் சேதுவில் ஸ்நாணம் பண்ணினவுடனே பஞ்சு பஞ்சுகளாகி விடுபட்டு ஓடிப்போய் விடும் மேலும் நாகலோசம், தெய்வலோகம், அக்கினிலோகம், பூலோகம் முதலான இராச்சிய பாரங்களும் போக பாக்கியங்களும் வேண்டியபேர்கள் பொன் பூமி ஆடையாபரணம் பூஷணுதிகள் தனகனக வஸ்து வாகனங்களும் நிதிநிக்ஷேபங்களும் அஷ்ட ஐஸ்வரியங்களும் வேண்டிய பொருளும் தவந் தானம் நேமம் நிஷ்டை பூசை முதலானவைகளும் வேண்டிய பேர்கள் சேதுவில் ஸ்நானம் பண்ணினவுடனே வேண்டியதை யடைவார்கள்.

பின்னும் ராமசேதுவில் ஸ்நானம் பண்ணுவதற்கு விருப்பமுடையவர்கள் பொன், பூமி, அரிசி, காய்கறி பதார்த்தங்கள் கோதானம் கன்னிகாதனம், வஸ்திரதானஞ் செய்து புராண சிரவணம் செய்து வேள்வி முடித்து சேதுஸ்நானஞ் செய்தால் அவர்களுடைய புண்ணியம் யாராலுஞ் சொல்லி முடியாது. அவர்கள் புண்ணியசாலிகள் அதினும் மனதில் யாதொரு தீங்குகள் நினையாமல் சேதுவில் ஸ்நானம்பண்ணின புண்ணிய புருஷாளுடைய பலன்களை நாம் ஒருவிதத்திலுஞ் சொல்லத்தக்கதில்லை யென்று பூலோக வளங்களையும் ராச்சியபாரம் பட்டாபிஷேகங்களையும் வேண்டியபோகங்களையும் தெய்வலோக வாழ்க்கைகளையும்வேண்டியவர்கள் வைகுண்டம், கைலாசம் முதலான விடங்களில் சாலோக சாமீப சாரூப சாயுச்சியபதங்களை வேண்டிய பேர்களுஞ் சேதுவில் ஸ்நானம் பண்ணினல் அவர்கள் செய்த தீங்கான பர்வங்களையும் போக்கும் அவர்கள் மனத்திற்கு மேலான இன்பங்களையும் கொடுக்கும். சகலமான விரதங்களிலுஞ் சகலமான நோன்புகளிலுஞ் சகலமான தீர்த்தங்களிலும் சகலமான ஸ்தல தெரிசனங்களிலுஞ் சகலமான போகங்களிலும் நூறுகோடிபங்கு அதிகம் இந்தச்சேதுவிலே ஸ்நானம் பண்ணின பேர்கள்சித்தமாயடைவார்கள் செல்வங்கள் வாணுட்கள், வித்தைகள், மந்திரங்கள். அஷ்டமாசித்திகள் அணிமாசித்திகள் கைகூடிவரவேண்டியபேர்கள் சேதுஸ்நானத்தை முக்கியமாய் நிறைவேற்றிக்கொண்டு வருவார்கள் அவர்கள் நம்பி முழுகினலும் மனமில்லாதவர்களாய் முழுகினலும் மேன்மையும் அவரவர் நினைத்தபடி சுகத்தை யடைந்து மறுமையிலு மப்படியே யிருப்பார்கள், பூரணச் சந்திரனைப்போலே தேகமும் குபேரனைப்போலே பாக்கியமும் தர்மங்களும் காமதேனு கல்பக விருஷங்களுஞ் சுரபி சிந்தாமணி பதுமபீடங்களும் உண்டாகும் பெரியோர்களிடத்தில்பொருள்வாங்கிப் போனலும் அவர்கள் கொடுத்தாலும்அவர்களுக்குகிடைக்கின்றபலனிற்பலன் பேர்பாதியாகக் கிடைக்கும்.

அப்படிச்சேதுஸ்தானத்துக்கு வரவேண்டியபேர்கள்கையில் பொருளில்லாமற்போனல்நல்ல பிராமணுள் பெரியோர்களிடத்தில் கேட்டு அவர்கள்கொடாமற்போனல் வைசியர்கையில் வாங்கிப்போகவேண்டும் அவர்கள் கொடுக்காமற்போனல் க்ஷத்திரியரிடத்திற் கேட்டு வாங்கிக்கொண்டுபோகவேண்டும். பசும்பொன்பதார்த்தம்

பட்டுவஸ்திரம், நவதானியம், அரிசி, காய்கறி பதார்த்த முத லானவைகள் தங்கள் தங்களால் இயன்றமட்டும் கொடுத்துத் துளசிதளம் வாங்கிக்கொண்டு சேதுவில் தீர்த்தமாடச் சொல்லி ஒருவனை யனுப்பிவைத்த புண்ணியபுருஷாளுக்கு வேதசாஸ்திர புராணங்களிற் சொல்லுகின்றபடிக்கு அஸ்வமேதயாகம்பண்ணின பலன்களுந் துலாபாரம் பசும்பொன்கொடுத்த பலன்களும்கொடுத் தவர்களுக்கும் வாங்கிக்கொண்டுபோனவர்களுக்கும் கிடைக்கின் றது, அல்லாமல் அவரவர் செய்த பாவங்களும் வேரோடு எடுபட் டுப்போம் சேதுவிலே தீர்த்தமாடவேண்டுமென்கிற ஆசையுடை யவன் தீர்த்தமாடப்போகுமுன்னே மரணமாகிப்போய்விட்டால் அவனுக்கும் மறுபடியும் சனனமாகி சேதுக்கரையிலே எப்பொ தும் வாசம்பண்ணிக்கொண்டிருந்து பிரதிதினமும் ஸ்நானம் பண்ணி மனமகிழ்ந்துக் கொண்டிருப்பான்

யாராவதொருவன் சேதுவிலே ஸ்நானம் பண்ணிவரச் சொல்லிப் போய்வந்தவுடனே கொடுக்கிறேனென்று சொன்ன பொருளைக் கொடாமற்போனால் அவனைப் பிர்மஹத்திபண்ணின பஞ்சமாபாதகனென்று அறிவுடையபெரியோர்கள் சொல்லுவார் கள். மேலும் இந்தச்சேதுவில் மாதுர்நிந்தனை, பிதுர்நிந்தனை, குருநிந்தனைகள் பண்ணினபாவிகளும் அவர்களைக்கொன்ற பாவி களும் கெதியென்று நம்பிவந்தவர்களைக் கைவிட்ட பாவிகளுந் தெய்வப்பிராமணாள் பசுக்களை அடித்தவர்களும் உதாசினம் பேசின பாவிகளுஞ் சாமகாலங்களில் அன்னம்பருந்து கொடுத்து சாப்பிடச் செய்தவர்களை உதாசினம்பேசின பாவிகளுங் கோடை காலங்களிலே மரஞ் செடி பூண்டுகளுக்குத் தண்ணீர்விடாத பாவி களுங் குளங்கள்வெட்டினதைத் தூர்த்தபாவிகளுஞ் சாலையை வெட்டியுந் தண்ணீர்ப்பந்தலைக்கெடுத்துஞ் சத்திரங்களை அழித் துங் கோயில் குளங்களையிடித்தும் பகவத்துரோகங் குருத்துரோ கஞ்செய்கிற பாவிகளும் தேவாலயங்களில் ஸ்திரீ புருஷாள் கூடி யிருந்த பாவிகளும் தன் பர்த்தாவுக்குமுன்னுண்டு உறங்கியும் நிருவாணமாயிருந்து குளித்தும் வாயிலே தாம்பூலம்போட்டு புருஷனுக்குப் பணிவிடைசெய்தும் எதிரிலிருந்து பேசினவர் களும் புருஷன் சொல்லைத்தட்டி நடந்தவர்களும், பரபுருஷா ளைக் காப்பாற்றித் தன் புருஷனை நிராகரித்து நடக்கின்ற பாவி களான ஸ்திரீகளுந் தாயார்தகப்பனுரை சம்ரக்ஷணை செய்யாமல் பெண்டீர்களை சம்ரக்ஷணைசெய்தும் பெரியவர்களை உதாசினம்

பேசியும், அடித்தும் தீபமில்லாமற் சாப்பிட்டும் சாஸ்திர நிந்தனை புராணநிந்தனைசெய்த பாவிகளும் பசுமாடுகளை சம்ரக்ஷணை செய்யாமல் பால்கறந்து குடித்தபாவிகளும், புண்ணிய கதைகளைக் கேளாத செவியையுடைய மூடர்களுந் தேவவிருக்ஷங்களை வெட்டியும், ஆலயங்களை யிடித்தும், குளங்களைத் தண்ணீரில்லாமல் வெட்டியும், கஞ்சா அபின்களைசாப்பிட்டும், மாமியார் வீட்டில் குடியிருந்து சாப்பிட்டும்; அந்தச்சொத்துகளை அபகரித்துப்புசிக்கப்பட்ட பாவிகளும்,இவர்களெல்லோரும் இந்தச்சேதுவைக்கண்டாலுந் தீர்த்தமாடினலுந்திவலைமேலேதெரித்தாலும் புண்ணிய புருஷராகி விடுவார்கள். தங்கள் நல்லவயதிலே சோரநாயகனுடனேகூடி அநுபவித்து சிசுக்களைச் சொந்தநாயகனறியாமல் வதைசெய்கிற ஸ்திரீகளைப் பஞ்சமாபாதகியென்று சொல்லுவார்கள் அப்படிக்கொத்த பாதகரை தேவாதிகளும் தங்களைக்கொன்ற பாவிகளென்றும் அஞ்சுவார்கள் மூன்றுலோகமுமப்படியேசொல்லும் அவர்களும் சேதுஸ்நானத்திற்குப் போகவேண்டுமென்று ஒருவன் கையிலொருவர் பொருள்வாங்கிக்கொண்டு போகாமலிருந்துவிட்டால் இவனைப் பஞ்சமாபாதகத்திலும் பாதகனென்றும், நீசனிலும்நீசனென்றும், வேதசுருதிகளினலே சொல்லப்பட்டிருக்கின்றது அவர்களும் எந்தவகையினலாவது என்ன பிரயாசைப்பட்டாவது-சேதுவில்ஸ்நானம் பண்ணவேண்டும் இல்லாவிட்டால் சேதுவுக்குப் போகச்சொல்லவேண்டும், அங்ஙனம் சக்தியில்லாதபேர்கள் வேண்டிய பதார்த்தங்களைத்தந்து நல்ல யோக்கியமான பிராமணனை போகச்சொல்லவேண்டும் அப்படிப் போகச்சொல்லவேண்டும் அப்படிப் போகச்சொல்வதற்குத் தன்னிடத்தில் பொருளில்லாமற்போனல் யாரிடத்திலாகிலும் வாங்கிக் கொடுத்தாயினும் போகச்சொல்லவேண்டும். மேலு யாகங்கள், யெக்கியங்கள் முதலானவைகளுக்குமாத்திரம் யாரிடத்திலாவது பொருள் வாங்கி நடப்பிக்கலாமென்று வேதவாக்கியம் சொல்லப்பட்டிருந்தாலுஞ் சேதுவுக்குப்போகின்றவர்கள் நீசரிடத்திலாவது பொருளை வாங்கிக்கொண்டு போனல் அவர்கள் புண்ணிய புருஷராவார்கள்,

அந்தச்சேது கிரேதாயுகத்தில் ஞானசொரூபமாகவிருந்து சகலமானபேர்களுக்கும் மோக்ஷ சாம்பிராச்சியத்தைக் கொடுத்துந் திரேதாயுகத்தில் தேவசொரூபமாகவிருந்து மேலான புண்ணிய லோகங்களைக்கொடுந்துந் துவாபரயுகத்தில் ஈவர சொரூப

மாகயிருந்துசக்கிரவர்த்திமுதலாகிய பேர்களுக்குச் சாம்பிராச்சிய பட்டாபிஷேகங்களை கொடுத்துங் கலியுகத்தில்சேதுசொரூபமாக இருந்து அவரவர் நினைத்த காரியங்களைக் கொடுத்துக் கொண்டி ருக்கின்றது அதின் மகிமைகளை நம்மாற் சொல்லி முடியாது தெரிந்தமாத்திரஞ் சுருக்கமாக உங்களுக்குச் சொன்னேமென்று சூதமகாரிஷி சொல்ல நைமிசாரண்யத்து ரிஷிகள் கேட்டு ஆனந்த சந்தோஷ ஆச்சரியங்களை யடைந்து இப்படிக்கொத்த சேதுவை ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியாகிய சர்வசிவ தயாபர மூர்த்திகள் என்ன காரணத்தின லுண்டாக்கின ரென்று ரிஷிகள் கேட்க சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கின ரென்றவாறு.

சேதுபலச் சரித்திரம்.

முற்றிற்று.

---

௳

கடவுள் துணை.

# சேதுபந்தனவிபரச் சரித்திரம்.

கோசலதேச மாளப்பட்ட தசரதமகாராஜா அறுபதினாயிரம் வருஷம் துரைத்தனம் பண்ணி அறுபதினாயிரம் ஸ்திரீகளைக் கலியாணம் பண்ணிக்கொண்டு அயோத்தியா புரியிலே யிருக்கின்ற போது தனக்குப் பிள்ளையில்லை யென்று கலைக்கோட்டு மகாரிஷியை அழைத்து புத்திரகாமேஷ்டியாகஞ் செய்து பிண்டங்கள் அமர்த்திக்கொடுக்ககோஸலாதேவி சுமத்திராதேவிகைகேசிதேவி யிவர்கள் வயிற்றில் ஸ்ரீவைகுண்டவாசகரான ஸ்ரீமந்நாராயண மூர்த்தியும் ஆதிசேஷனுஞ் சங்கு சக்கரங்களும் ஸ்ரீராமமூர்த்தியாகவும், லக்ஷ்மணராகவும் பரதசத்துருக்கராகவும் அவதரித்து வளர்ந்து பரிபாலனமாகி வித்தைகள் அப்பியாசம் பண்ணி சவுள உபநயன முதலானதும் நடத்திவைத்து ஆனையேற்றங் குதிரையேற்றம் வில்வித்தை முதலான தநுசாஸ்திரங்களும் படித்து சமர்த்தராகவிருக்கும்போது விசுவாமித்திரர் யாகம்வளர்க்கவேண்டியதாய் தசரத மகாராஜாவிடத்தில் வந்து ஸ்ரீராம லக்ஷ்மணர்களைக் கேட்க இரண்டுபேரையும் வசிஷ்டர் வாக்கியந் தப்பாமல் தசரதருங் கூட்டியனுப்பிவிக்கவிசுவாமித்திரர் அவர்களைக் கூட்டிக்கொண்டுவந்து யாகத்தை அழித்துப்போடாமல் அஸ்திரத்தினாலே சரக்கூடங் கட்டி வில்லாளிகளாயிருந்த இரண்டு பேரையுங் காத்துக்கொண்டிருக்கும்படி செய்து யாகம் வளர்க்கின்றபோது தாடகை முதலானபேர்கள் வந்துஅனேகம் இம்சைகள் செய்ததினாலே அவளையுஞ் சங்காரஞ் செய்து விசுவாமித்திரர் யாகத்தை நிறைவேற்றிப் பூரணாகுதி செய்து இந்திராதி தேவர்கள் ரிஷிகள் மூலமாய் அநேக வரப்பிரசாதங்களும்அஸ்திர சஸ்திர பாணங்களும் பெற்றுக் கொண்டு விஸ்வாமித்திரர் பின்னாலே வருகின்றபோது கருங்கல்லாய்க் கௌதமரிஷி சாபத்தினாலே கிடந்த அகலிகையும் ஸ்ரீராமசுவாமியினுடைய பாதம் பட்டவுடனே பெண் சொரூபமடைந்தெழுந்து வணங்கினாள், அவளையுங் கௌதமரிஷியிடத்திற் கனுப்பி வைத்துவிட்டு சரபங்கரிஷி ஆச்சிரமத்துக்கு வந்து அவரையும் நமஸ்கரித்துக் கொண்டு மிதுலாபுரிக்கு வந்து ஜனகமகா ராஜனிடத்தில் விசுவாமித்திரர் பரிக்ஷைசெய்ய சீதை

யுடனே வரப்பிரசாதமாய்ப் பிறந்திருக்கின்ற வில்லையுமுறித்து தசரதமகாராஜா முதலாகிய சகலரையும் வரவழைத்து சீதாலக்ஷ்மி முதலானபேர்களை ராமச்சந்திரர் முதலான நாலுபேர்களுக்குங் கலியாணம்பண்ணிக் கொண்டு மிதிலாபுரி பட்டணம்விட்டு அயோத்திக்கு வருகின்றபோது பரசுராமரிஷியினுடைய பலமுங் கையில்லும் வாங்கிக்கொண்டு அயோத்தியாபுரி பட்டணம்வந்து சேர்ந்தார்கள், அப்படியிருக்கின்றபோது தசரதமகா ராஜாவானவர் வசிஷ்டருடனேயோசனைபண்ணி ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய யெத்தனித்திருக்கின்றபோது கைகேசி வார்த்தையைக் கேட்டுக்கொண்டு பரதனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்வதாய் ஸ்ரீராமனை வனத்திற்குப் போகச்சொன்னதினால் ராமரும் லக்ஷ்மணருஞ்சீதாதேவியும் அயோத்தியாபுரிபட்டணம்விட்டுசித்திரகூடபருவதம்வந்து கங்காநதி தாண்டவேண்டியதற்கு குகனென்னும் வேடனையும் சினேகிதங்கொண்டு ஓடமேறிச்சித்திரகூடம் வந்து சேர்ந்தனர்கள். தசரதமகாராஜாவும் புத்திரசோபத்தினாலே மரணத்தைபடைந்தார். பரதனுஞ் சத்துருக்கனுந் தசரதரையெடுத்து அடக்கஞ்செய்துவிட்டுச் சித்தரகூடம்வரைக்குகும் வந்து சேர்ந்து ராமசுவாமிபால்தசரதமகாராஜாவுக்குச் செய்யவேண்டியகிரியைகளைச்செய்து ராமருடைய கட்டளைப்படி அயோத்திவந்துசேர்ந்து சத்துருக்கமகாராஜாவை அயோத்திமாநகரத்தை ஆளும்படிச்செய்து பரதமகாராஜன்நந்திக்கிராமத்தில் ராமசுவாமியினுடைய சேவடிபாகியபாதுகையைப்பூசித்துவந்தார். ராமலக்ஷ்மணனுஞ் சீதாதேவியுஞ்சித்திரகூடபருவதம்விட்டுப் புறப்பட்டு வனத்தைநோக்கி வந்தார்கள். இப்படியிருக்குஞ்சமயத்தில்காகாசுரனென்னு மோராக்கன்வந்து சீதையைபெடுத்துக்கொண்டு போனதினால் அவனைச்செயித்துச்சீதையை விடுவித்துக்கொண்டு அகஸ்தியர் முதலான மகாரிஷிகளுடைய ஆச்சிரமங்களெல்லாம் வந்து அவர்களையெல்லாங்கண்டு தெரிசித்து அனேகவரப்பிரசாதங்களும் அனேக ஆயுதங்களும் பெற்றுக்கொண்டு வனமெல்லாஞ் சஞ்சாரம்பண்ணிக்கொண்டு பஞ்சவடிதீர்த்தக்கரையில் பன்னகசாலையைக் கட்டிக்கொண்டு சீதாதேவியும் லக்ஷ்மணரும்எவற்பணிவிடைகள் கேட்க ராமசுவாமியும் இந்தவிதமாகயிருக்கின்றபோது சூர்ப்பநகைவந்து ராமலக்ஷ்மணனுடனே சம்வாதம்பண்ணி மூக்கு,முலையு மறுப்புண்டு கரதூஷண திரிசிராளிடத்திற்போய்ச்சொல்ல அவர்களும் ஆயுதபாணிகளாகவந்தெதிர்த்து ராமச்

சந்திரமூர்த்தியின் கையினலே மடிந்துபோனர்கள். அப்பால்சூர்ப் பநகைபுறப்பட்டு இலங்கையிலேபோய்த் தன்னுடைய தமையனு கிய இராவணனிடத்தில் அனேகந் தூர்ப்புத்திகளையுஞ் சீதையி னுடைய அழகுகளையும் சொல்ல அவனுங்கேட்டுத் தன்னுடைய மாமனகிய மாரீசனை மான்சொரூபமாக முன்னிட்டுக்கொண்டு பஞ்சவடிதீர்த்தக்கரையிலே மாறுகை சீதாதேவிமுன்னே விளையா டிக்கொண்டுநிற்கச் சீதை அம்மானைப் பிடித்துத் தரும்படிகேட்க ராமச்சந்திரமூர்த்தியும், வில்லும், அம்பும் எடுத்துக்கொண்டு மா னைத் துரத்திப் பிடிக்கக்கூடாமல் ஓரம்பினல் எய்தவுடன் மான் விழுகின்றபோது ஒலக்ஷ்மணுவென்று அலறி அபயமிட ராமர் குரலைப்போல் மாயையினலே மரீசன்செய்ய அப்படிவிழுந்தசத் தத்தை லக்ஷ்மணர்கேட்டு ரா்க்ஷசமாயையினலே தமயனுக்கு மோசம்வந்ததென்று ஆயுதபாணியுடனே சீதை சொற்படிக்கு வனத்தைநோக்கிப் போய்விட்டார். அப்போதுராவணன் சந்யாசி யாகவும்வந்துசீதையிருக்கின்ற பன்னகசாலைவாசலிலே பிச்சை கேட்கச் சீதையம்மனும் பிச்சை கொண்டுவந்தாள், உடனே பூமி யோடு பேர்த்தெடுத்துத் தேரின்மீது வைத்துக்கொண்டு மாய மாய் இலங்கையைநோக்கிப் போகும்போது சடாயுவும்வந்து எதி ர்த்தார், அவரை உபாய தந்திரங்களினலேராவணன்கொன்றுபோ ட்டுப்போகும்போது சீதையுந் தான்பூண்டிருந்த ஆபரணங்களைச் சுழற்றிக் கிஷ்கிந்தாமலைக்கருகிலிருக்கும் மதங்ககிரிமலையில் போ ட்டுவிட்டு மகாவிசனத்துடனே அபயமிட்டு அழுதாள். உடனே ராவணனும் அதிசீக்ரகிரமாக இலங்கையிற் கொண்டுபோய் அசோகவனத்திலே ராக்ஷசஸ்திரீகளைக் காவலாகவைத்து பயப் படுத்திச் சீதையம்மன் தன்னைச் சேரும்படிக்குயோசனை செய்ய ச்சொல்லி தான் இலங்கைக்குப்போனன், சீதையும் அந்தவனத் தில் மகாவிசனத்துடனே ஸ்ரீராமஸ்மரனை பண்ணிக்கொண்டிருந் தாள். அப்பால் வனத்திலே மான்பிறகேபோயிருந்த ராமசுவா மியும் அவரைத்தேடிக்கொண்டுபோன லக்ஷ்மணரும், பன்னகசா லையில்வந்து பார்த்து சீதையம்மனைக்காணமல் திடுக்கிட்டு அந்த வனமெல்லாந்தேடிக்கொண்டு வரும்பொழுது சடாயுவானவர் குற்றுயிருடனே கிடக்கின்றதைக்கண்டு ஸ்ரீராமசுவாமியும் லக்ஷ் மணரும் மகாவிசனத்தையடைந்து சடாயுவினலே சீதையம்மனை பாவியாகிய ராவணன் இலங்கைக்குக் கொண்டுபோ யிருப்பதை அறிந்துக்கொண்டு! உடனேஜடாயுவும்! மரணமானர்! ஜடாயுவை

யுமெடுத்து அடக்கஞ்செய்து விட்டு வனத்திலே புறப்பட்டு வரும் போது கபந்தாசுரனையுஞ்சங்கரித்து சபரியம்மனை வைகுண்டத்துக்கு அனுப்பிவைத்துக் கிஷ்கிந்தாமலைக்கு அருகில் வருகின்ற போது பம்பையாற்றங்கரையில் ஒரு மரத்தடியில் அனுமார் நின்றார் அவரிவர்களைக் கண்டு நெருங்கி வந்து அவர்களுடைய முக வாட்டங்களைப் பார்த்து நீங்கள் யார் எங்கிருந்து வந்தீர்கள் எங்கே போகிறீர்களென்று கேட்க அப்போது ஸ்ரீராமசுவாமியும் லக்ஷ்மணரும் நடந்த காரியமெல்லாம் ஆதியோடாந்தமாகச் சொல்லி அனுமானுடைய காதிற் கிடந்த கவசகுண்டலத்தையுங் கண்டு ஆச்சர்ய மடைந்தார்கள்.

அப்போது அனுமாருஞ் சுவாமிகளுக்கு உண்மையாகிச் சுக்கிரீவன் முதலான பேர்களையும் வானரச் சேனைகளையும் நட்புக் கொண்டு வாலியையுங் கொன்று துந்துபி யெலும்பையும் மராமரத்தையுந் தவிடுபொடியாகச் செய்து சுக்ரீவனுக்குத் தாரையைசேர்ப்புவித்து கிஷ்கிந்தாபுரிக்குப் பட்டாபிஷேகஞ் செய்து வானராதிகளை காற்காலங் கிரமித்தவுடனே வரும்படிக்கும் அனுமார் முதலான படைத்தலைவரையுங் கூட்டிக்கொண்டு போய்ச் சீதையம்மனைத் தேடி வரும்படிக்கு திருவாழி மோதிரங் கொடுத்துஅனுப்பி வைத்தார். அனுமாரும் வானராதிகளுடனே புறப்பட்டு வனங்கள் மலைகளெல்லாந் தேடிச் சீதை யம்மனைக் காணாமல் மயேந்திரகிரி பருவதம் வந்துசேர்ந்து சம்பாதியை நட்புக் கொண்டு அவர்கள் சொற்படி அனுமார் விஸ்வரூபங்கொண்டு மைநாகபருவதத்திலேறிகுதித்து இலங்கைமாகாளியையுங்கொன்று அரக்கர்களையும் அட்சய குமாரனையும் சம்புமாலியையும் பஞ்ச சேனாதிபதியுங் கொன்று ஸ்ரீ சீதா தேவியம்மனைக்கண்டு திருவாழி மோதிரங் கொடுத்து அப்பால் இந்திரசித்துவினால் பிடிப்பட்டு இராவணனைச் சந்தித்து அவனால் வாலில் தீயைக் கொளுத்தப் பட்டு அக்கினியினால் வாலைப் பிடித்துக்கொண்டு யெரியுந் தீயைக் இலங்கைப் பட்டண மெழுநூற்றுக் காதவழி கொளுத்திச் சீதா தேவியம்மன் கொடுத்த சூடாமணியையுமெடுததுக் கொண்டு மயேந்திரகிரி பருவதம் வந்துசேர்ந்து வானராதிகளுடன் கிஷ்கிந்தை வந்து ஸ்ரீராமசுவாமியை கண்டு சூடாமணியைக் கையில் கொடுத்தார்.

ஸ்ரீராமசுவாமியும் அனுமார்பேரில் மகா சந்தோஷத்தை யடைந்து வானராதிகளுஞ் சுக்ரீவன் முதலாகிய படைத்தலைவர்

களுடன் புறப்பட்டு கிஷ்கிந்தாமலையை விட்டு வாலிகுண்டம் திருப்பதி மலைமார்க்கமாய் மயேந்திரகிரி வந்து சேர்ந்து அதன் சாரலிலுள்ள சக்கரத்தீர்த்தத்துக்கருகில் தென்சமுத்திரக்கரையி லெழுந்தருளியிருந்தார். அப்படியிருக்கின்ற காலத்தில் இலங்கை நகரத்தில் அநுமார் தீயைக் கொளுத்திப்போட்டு வந்த பிறகு இராவணனுடைய தம்பியாகிய விபீஷணன் தமயனாகிய இராவண னுக்கு அனேகமான புத்திகளை ஸ்ரீராமசுவாமியினிடத்தில் சீதா தேவியைக் கூட்டிக்கொண்டுபோய் விடும்படிச் சொல்லியும் இரா வணன் கேளாததினால் மகாஞானியான விபீஷணன் பின்வருங் காரணங்களை அறிந்துக்கொண்டு தமயனை வெறுத்துவிட்டு நாலு மந்திரிமார்களுடனே இலங்கையை விட்டுப் புறப்பட்டு தென் சமுத்திரத்தில் எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி பாதத்தில் சரணாகதியடைந்து அடைக்கலம் புகுந்தான் ஸ்ரீராமச் சந்திர மூர்த்தியும் லக்ஷ்மணப் பெருமானுஞ் சுக்ரீவன் அனுமார் ஜாம்புவர் முதலான பேர்களுடன் யோசனை செய்துக்கொண்டு க்ஷத்திரிய தர்மத்தின்படி விபீஷணனை அடைக்கலங்கொண்டு உடனே இலங்காபுரியின் அரசாக்ஷிக்கு பட்டாபிஷேகஞ் சூடிக் கிரீடமுந் தரித்து விபீஷணன் முதலானபேர்களால் இலங்கை யின் வர்த்தமானங்க ளெல்லாம் ஸ்ரீராமச்சந்திரசுவாமி கேட்டு யோசனை செய்துக் கொண்டு மானிட ஜென்மமாய்ப் பூமியிற் பிற ந்து விட்டு க்ஷத்திரிய தர்மத்தின்படி நடக்கவேண்டுமே யன்றி தெய்வ நிர்ணயங்களைச் செலுத்தக் கூடாதென்று இந்தச் சமுத் திரத்தைக் கடந்து இலங்கைக்கு பெப்படிப் போகலாம் நாம் ஒரு வழியாய்ப்போய்ச் சேர்ந்தாலும் வானரப்படைகள் எழுபத் திரண்டு வெள்ளமும்போய்ச் சேரவேண்டும் இதற்கு யோசனை யென்னவென்று நானாவிதங்களாக யோசித்துக்கொண்டும் மகா துயரத்தை யடைந்து நமக்குத் தகப்பன் மரணமாய்ப்போய்த்தாய் மார்கள் அமங்கிலியமடைந்தும் இராச்சியங்களைவிட்டுப் பிரிந்துஞ் சீதையைப் பறிகொடுத்து மிருக்கப்பட்ட விசனத்திலும் மகா துக்கமாக நேரிட்டது. இந்தச் சமுத்திரத்தைக் கடந்து இலங் கைக்குப்போவது இராவணனைக் கொன்று சீதையை மீட்டுக் கொண்டு வாரமல் அகஸ்தியமகாமுனிவர் சொல்லிய வாக்குந் தப் பிப்போமா அவர் வாக்குப்படியே கெந்தமாதனத்தில் இராவண னைக்கொன்ற தோஷந்தீர சிவபூசை பண்ணுமற்போமாவென்று வெகுவிதங்களாக யோசனைபண்ணுகின்றபோது விபீஷணனுஞ் சொல்லுவான்.

இலங்கைக்குப் போகவேண்டுமானல் வானராதிகளால் சமுத்திரத்திற்கு அணைக்கட்டி அப்பாலத்தின்பேரில் நடந்துபோக வேண்டுமென்று சொல்ல சுவாமியும் அந்தவார்த்தையை ஒப்புக்கொண்டு சமுத்திரத்தின் ஆழம் நீளமறிந்து அணையைக்கட்ட வருணனைநோக்கி ஏழுநாள் தர்ப்பாசனத்தில்வருணமந்திரத்தைத் தியானித்துக்கொண்டிருந்தார். அதையறிந்து வருணனும் வராததுகண்டு க்ஷணத்தில் சுவாமிக்குக் கோபம்வந்துபாணத்தைப்பிரயோகஞ்செய்தார். வருணனும்பயந்து சரணகதியையடைந்து தோத்திரமுஞ் செய்தார். சுவாமியுந் தயவுவந்து இச்சமுத்திரத்தினுழமு மிலங்கைக்குப்போக நீளமென்னவென்றுகேட்டு அணைகட்டவேண்டியதையுஞ் சொல்லவருணனுங்கேட்டு சுவாமி இவ்விடமிருந்து இலங்கைக்குநூறுயோசனைதூரமிருக்கின்றது ஆழங்காணக்கூடாது அணைபோட வேண்டுமானல் போட்டகல் மிதக்கும்படி வரப்பிரசாதங்களினல் பிறந்திருக்கின்றான், வானரப்படைத்தலைவரில் நளனென்னுமொருவன் சுவாமியுடன்வந்திருக்கின்றான் அவன் பூர்வஜன்மத்தில்மயனுகிய சிற்பனுக்கும் அவனுக்கு சுவாமிகள் உத்தரவுகொடுத்து வானரப்படைகளால் ஒத்தாசைசெய்தால்அவனும் கட்டுவானென்றுசொல்லசுவாமியும் அவனையழைத்துப் பரிசிந்து நீரிலேபோட்டகல் மிதக்கும்படி உன் பிதாவினுடையவரப்பிரசாதம் பெற்றவனுகலின் அநுமார்முதலாகிய வானரப்படைவீரர்களான வானரவீரர்கள் கொண்டுவந்து கொடுக்கின்ற பர்வதங்களைவாங்கி உன்கையினல்இலங்கைக்குப்போகும்படி வருணனுடைய முதுகின்பேரில் அணைகட்டென்று ஸ்ரீராம சுவாமி வரப்பிரசாதங் கொடுத்தருளியாதொருவிச்கினங்களும் வராமல் நிறேவேற்றும்படிக்கு விக்கினேஸ்வரனைப்பூசித்து அநுக்கிரகம்பெற்று அப்பால் நவக்கிரகங்களையும் விதிப்படி நவபாஷாணஸ்தாபிதஞ்செய்து பிராமணப்பிரதிஷ்டைசெய்து அப்பால் சனிப்பிரீதியாய் எண்ணெய்யைவைத்து சிவப்பிரதிஷ்டை செய்து திலதீஸ்வரரைபூசித்து இவர்களுடைய அநுக்கிரகம் பெற்றுக்கொண்டு நளனுக்குச் சேதுபந்தனத்துக்குத் தேங்காய் தொட்டுக்கொடுத்து அநுமார்முதலிய பெரியோர்களான படைத்தலைவரையும் வானரப்படைகளையும் நாலுதிக்குகளிலும்போய் பருவதங்

களைக்கொண்டுவந்து கொடுக்கும்படிகட்டளையிட ஸ்ரீராமருடைய வாக்கியப்படி வானராதிகளெல்லாம் பருவதங்களை சங்கையில்லாமல் கொண்டுவந்து மேன்மேலும் கொடுக்க ஸ்ரீராமசுவாமியும் லக்ஷ்மணரும் ஜயம்ஜயவென்றுவாக்குக் கொடுக்க நளனுனவன் வாங்கிக்கட்டின திருவணையானது நவபாஷாணமுதல் தர்ப்பசயனம் மத்தியாக புல்லாரண்யங்கடைசியாய் ஈசானமும் அதிலிருந்து அக்கினிதிசை பிரவேசமாய் தெற்குமுகமாய் இலங்கையை நோக்கிப் பவளமால் மலேவரைக்கும் நூறுயோசனை நீளமுஞ்செய்து சேதுபந்தன முடிவாயிருக்கும். அப்படி ஸ்ரீராமசுவாமியாலே அநேக நதிகள், சுனைகள். ரிஷிகள் சஞ்சாரஞ்செய்துக்கொண்டுருந்த பருவதங்களை ஸ்ரீராமர் வாக்கியத்தின்படி வானராதிகளால் கொண்டுவந்து கொடுக்க நளன்வாங்கி அடைக்கின்றபோது சமுத்திரத்தை அப்போதுங் கண்பார்க்கவந்த ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி நடக்கும்போதுபட்டபாதாரவிந்தங்களிலுள்ள சங்குசக்கரரேகைகள் சேதுவில் பிரகாசித்துக்கொண்டிருக்கும் அத்தகையபருவதங்கள் சங்கு சக்கரங்களில் அலேமோதிச்சத்தத்துடன் ஆடம்பரஞ்செய்து கெர்ச்சிதங்களைப்பண்ணி தென்சமுத்திரமானது மகா ஆனந்த சந்தோஷங்களை யடைந்துகொண்டிருக்கும்படி அலேமோதுகின்றன. சமுத்திரஜலத்துக்கு சேதுதீர்த்தமென்றுபெயர். அநேகயுகங்களாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றது இப்படிக்கொத்த சேதுவில்ஸ்நானம் பண்ணினபேர்களையும் சேதுவைக் கண்ணுல் கண்டபேர்களையுஞ் சேதுவினுடைய காற்றுப்பட்டபேர்களையும் புண்யபுருஷாள், புண்ணியசாலிகள், கிருதார்த்தர்கள், மகா எக்கியசாலிகளென்று வேதங்களாலே முறையிட்டுக்கொண்டிருக்கின்றது. மேலும் இந்தச்சேதுவில் அநேகங்கோடானுகோடிதீர்த்தங்கள் மகாபாதங்களைத் தீர்க்கும்படி வரப்பிரசாதங்கள் பெற்றது அதிலும் முக்கியமாய் சக்கரதீர்த்தம், வேதாளதீர்த்தம், பாவவினசதீர்த்தம், சீதாகுண்டம், அமுததீர்த்தம், பிர்மகுண்டம், அநுமகுண்டம், அகஸ்திய தீர்த்தம், இராமதீர்த்தம், லட்சுமண தீர்த்தம், ஜடாமகுட தீர்த்தம் லட்சுமிதீர்த்தம், அக்கினிதீர்த்தம், சிவதீர்த்தம், சங்குதீர்த்தம்,காயா

தீர்த்தம், கெங்காதீர்த்தம், சாவித்திரிதீர்த்தம், காயத்திரிதீர்த்தம், கோடிதீர்த்தம், தனுக்கோடி தீர்த்தம் ஆகிய இந்த இருபத்து நான்குதீர்த்தங்களே முக்கியமானவைகள் விசேஷ மென்று சூத புராணிகர் சொல்ல நைமிசாரண்யத்தி ரிஷிகள் கேட்டு ஆனந்த சந்தோஷ ஆச்சரியங்களே யடைந்து இப்படிக் கட்டின சேதுவில் இந்த இருபத்துநான்கு தீர்த்தங்களும், ஆதி முதன் மையாய் விளங்குகின்ற சக்கரதீர்த்தமும் வந்த காரணமென்ன வென்று ரிஷிகள் கேட்க சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினு ரென்ற வாறு.

## சேதுபந்தன சரித்திரம்

முற்றிற்று.

---

கடவுள் துணை.

## தர்மபுஷ்கரிணி யென்ற

# சக்கர தீர்த்தச் சரித்திரம்.



கேளுங்கள் முனிவர்களே முன்னொரு காலத்தில் காளவ மகாரிஷீ தென்சமுத்திரத்திற் புல்லாரணியத்தில் பாலோடை யென்னும் நதிக்கருகில் விஷ்ணுவை நோக்கித் தவங்கள் செய்ய வேண்டி ஊணுறக்க மின்றிப் பொறிபுலனடக்கி, மவுனத்தோடுஞ் சாந்தமடைந்து வாயுபட்சணம் பண்ணிக்கொண்டு ஆகாயத்தினின் றிலங்கும் ஏழுமேகங்களில் ஆவர்த்தமென்னு மேகத்தால் பெய் கின்ற மழையோடு மழையாயும், காற்றோடு காற்றாயும், தீயோடு தீயாயும், விஷ்ணுமூர்த்தியினது அஷ்டாட்சரத்தை இடைவிடா மல் தியானித்துக்கொண்டு தேவக்கணக்கில் ஆயிரவருடம் வரை யில் தவஞ்செய்து கொண்டிருக்கையில் அம்முனிவர்மீது ஸ்ரீயப் பதி கருணை கூர்ந்து சங்கு சக்கர கதாபாணியாய்க் கருடவாக னத்தின் மீது லட்சுமி சமேதராய் முப்பத்து முக்கோடி தேவர் கள் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷீகள் கின்னர கிம்புருட கருட காந்தர்வாதிகள் யாவரும் புடைசூழ வெழுந்தருளி புல்லார ண்ணியக்ஷேத்திரத்தில் பஞ்சாக்கினி மத்தியில் தவஞ் செய்து கொண்டிருக்குங் காளவ முனிவனுக்கு ப்ரசன்னமாக அப் போது முனிவன் கண்மலர்ந்து கடவுளை நோக்கித் துண்ணென வெழுந்து பக்திவிநயத்தோடும் அஷ்டாங்கபஞ்சாங்க திரியாங்க மாய்ப் பணிந்தெழுந்து இருகரங்களையுஞ் சிரத்திற் கூப்பி ஆ னந்தக் கூத்தாடி புளகாங்கிதங் கொண்டு இருகண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் தாரைதாரையாய்ப் பெருக அப்பெருமானை ஸகஸ்திர நாமங்களாலும் துதித்து நிற்க. ஜனார்த்தனன் மனமகி ழ்ந்து காளவமுனிவனைப்பார்த்து முனிவரனே உன் தவத் திற்கு யாம் மெச்சினோம் உமக்கென்ன வரம் வேண்டுமென்று கேட்க காளவர் சுவாமி அடியேனும் தேவரீரைப்போல் ரூபம் பெற்று பரமபதத்திலெப்போதும் உம்மை விட்டு அகலாதிருக்க வும், உமதுசாணார விந்தத்தை நித்யர் முத்தர்களாகிய பரமபாக வதர்களுடனே வணங்கிக் கொண்டிருக்கவும் திருவாக்கருள



தர்பசயனம் திருப்புல்லாணி.

வேண்டுமென்று கேட்டனன், அப்போது பரமபதநாதன் காளவ முநியே நீ இதுவரையில் யாவருங்கேளாத வரத்தைக் கேட்டமையால் நாம் அப்படியே கொடுப்பதற்குத் தடையென்ன ஆயினும் இக்கர்மபூமியிலே யின்னஞ் சனன மனுபவிக்கவேண்டி யிருப்பதினுல், அவை தொலையும்படி இப்போது நீர் தவஞ்செய்துகொண்டிருக்கு மிடத்திற்குச் சிலதுதூரம் உத்தரபாரிசத்தின்கண் தருமபுஷ்கரிணி யென்றெரு தடாகமிருக்கின்றது, அந்தத் தடாகத்தினிடம் இதற்குமுன் ஓர் காலத்தில் தரும தேவதையானது, தான் அன்பால் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்துகொண்டிருக்கையில், அப்பெருமான் மான்மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்திர சூலபாணியாய் சந்திரசடாதர மூர்த்தியாய், பார்வதி சமேதராய் சிவகணங்கள் சூழ வெள்விடைமீ தெழுந்தருளித் தரும தேவதை முன் பிரத்தியட்சமாகி உனக்கென்ன வரம் வேண்டுமென்று கேட்க அத்தேவதையும் வணங்கித் துதித்து சுவாமி அடியேன் சர்வகாலமும் தேவரீரது திருப்பணி செய்து தேவரீரைச் சுமந்துகொண்டிருக்க ஆவல் கொண்டமையால் அவ்வாறே அருள்செய்ய வேண்டுமென்று விண்ணப்பிக்க, அதற்குப் பரமசிவன் சந்தோஷித்து அங்கோர் தடாகத்தை தெய்வீகமாயுண்டுபண்ணி அதில் தரும தேவதையை மூழ்கும்படி ஆஞ்ஞாபிக்க, அதைக்கேட்ட தரும தேவதையும் அங்ஙனமே மூழ்கையில், முன்னிருந்தவுருவமாறி நந்தி யுருவமாய் நான்குகால்களும் இரண்டுகொம்பும் எருது வாலுமாய்த்தோன்றி சுவாமியின் முன்னிற்க, அதனைக்கண்ட ஸ்ரீகண்டமூர்த்தியாகிய பரமசிவன், பார்வதியாருடன் அதன்மீது ஆரோகணித்து யாவருக்குங் காட்சிதந்துஇத்தடாகத்திலே தீர்த்தமாடி. நம்மைத் தாங்கினமையின்இத் தடாகத்திற்கு இதுமுதல் தரும புஷ்கரிணி யென்று திருநாமம் வழங்குவதோடும் இதில் தீர்த்தமாடியவர்கள் நினைத்தபடி எல்லாச் சுகங்களையும் பெறுவார்களென்று திருவாய்மலர்ந்தருளி, பின் தேவர்களுடனுஞ் சிவகணங்களுடனுந் திருக்கைலைக்கெழுந்தருளினர்.

ஆதலால் அத்தடாகத்திற்கு அன்றுமுதல் தரும புஷ்கரிணி யென்றும், தெய்வத்தன்மை யுடையதென்றும், மகத்துவ மிருப்பதால், நீரும் அதில் மூழ்கிச் சதாகாலமும் அக்கரையிலே தவஞ்செய்து கொண்டிருந்தால் நம்முடைய வுருவம்பெற்று வைகுண்

டத்துக்கு வருவீர் அங்ஙனம் நீர் தவஞ்செய்கையில் பிறரால் இடையில் தவத்துக்கு ஊறுநேரிடின் அப்படி நேரிடச்செய்த வரை நம்முடைய சக்கரம் உடனே வந்து அக்கொடியரைச் சங் கரித்துவிடுமென்று திருவாய்மலர்ந்தருளி மாயபிரான் ஸ்ரீவை குண்டத்துக் கெழுந்தருளினர். பின்னர் காளவமுனிவனும் அவ் வாறே சென்று உதயாதி அந்திநேரம் மத்தியானமும் அத்தரும புஷ்கரிணியில் முக்காலமுந் தீர்த்தமாடி அதின்கரையில் தனது தேவபூஜையாகிய சாளக்கிராமங்களை வைத்துப்பிரதிஷ்டைசெய்து பூசித்து சங்கிரமச்சஷ்டி அஷ்டமி சதுர்த்தசி பூரணை அமாவாசை முதலாகிய தினங்களிலே தர்ப்பணமுதலிய கிரியைகளை நடத்தித் தவஞ்செய்துக்கொண்டிருக்கையில், அம்முனிவனை ஓரரக்கனை வன்வந்து தாவியெடுத்தான், உடனே காளவமுனிவன் பரமபத நாதனைத் துதிக்கையில் அப்போது விஷ்ணுமூர்த்தியின் சுதர்சின சக்கரமானதுகோடி சூரியப்பிரகாசம்போல்கரகரவெனச்சுழன்று வந்து அவ்வரக்கனைச் சங்கரித்துக் காலவமுனிவனை விடுவித்தது. அப்போ தம்முனிவன் மிகநடுங்கி ஸ்ரீ சக்கரத்தைப் பணிந்து, நீ என்றும் அடியேனை யிடைவிடாமற் காக்கவேண்டுமென்றுவேண் டிக்கொள்ள அப்போது சக்கரமானது யான் எந்தையாகிய ஸ்ரீ வைகுண்டவாசனது கட்டளைப்படி வந்து அரக்கனைச் சங்கரித் தேன் இனிமேல் உமது வேண்டுதலின்படி நான்வந்திருக்கவேண் டுமாயின் எம்பெருமானிடம் விடை பெற்றுக்கொண்டு உன் விரு ப்பத்தின்படி வந்திருக்கிறேன், இப்போது நானிவ்வரக்கனைக் கொன்ற பாவந்தீர எனக்கொரு வகை சொல்லுமெனக் கேட்க, அதற்கு அம்முனிவன் ஆனந்தித்துஇத்தடாகத்திலேமூழ்கென்று சொல்ல அதுபோலச் சக்கரம் உடனே மூழ்கித்தெய்வீகமாய்த் தன் கருமத்தை யொழித்து முன்போலப் பிரகாசம் பொருந்தி நானித்தடாகத்தில் முழுகியபடியால், இன்றுமுதல் இதற்குச் சக்கரதீர்த்தமென்று பேயர் விளங்கக் கடவதென்று திருவாய் மலர்ந்தருளி இனி இத்தீர்த்தத்தில் யார் மூழ்கினும் அவர்களைப் பற்றிய பேய் பிசாசுகல் அலகை வேதாளங்களெல்லாம் விலகிப் போகக் கடவதென்றும் வாக்குத்தந்து, முனிவருக்கு ஆசீர்வா தஞ்செய்து அவரிடத்தில் விடைபெற்றுச் சக்கரம் ஸ்ரீவைகுண் டம் போயமர்ந்தது.

அவ்வாறுண்டாகிய சக்கர தீர்த்தமானது ஆதியிற் சேதுபந் தனஞ்செய்த திருவணையில் தோன்றித் தருமபுஷ்கரிணி யெனப்

அப்போது தேவியானவள் தனது தண்டத்தினாற்றட்டித்தவி டுபோற்செய்து காற்றிலலையவிட்டு மகிஷனைப்பார்த்து மகாவுக்கிர த்தோடும் அடா உனதுசிவனைக் கணப்போதில் மடித்து தென்றி சைக்கடவுளாகிய இயமபிரானுக்கு வாகனமாக வனுப்புகிறேனெ ன்று வீராவேஷத்தோடுங் கையை மேலேதூக்கி மகிஷாசுரன் தலையிலே கோடைகாலத்திடிபோற் குத்தினாள், அக்குத்தினால் அசுரனுடைய சுபாவமானது கலங்கிக் கண்கள் தெறித்து தேகத் திலுள்ள எலும்புகளெல்லாமுறிந்து நெக்குவிட்டு உள்ளம்பதறி நிலைநிற்கமாட்டாமற்றென்றிசையைநோக்கி யோட்டமெடுத்தான் அதுகண்டு தேவியானவள் மிகவும் ஆக்ரமித்து குருகென்னும் பறவையை யிரைகொள்ளவெழுந்த இராஜாளியைப்போற் றொட ரச் சிங்கத்தையேவு கையில் அப்போது அசுரனானவன் ஓடுவதற் கசக்தனாய் இனி நம்மால் ஓடமுடியாதெனக்கருதித் தான் ஓடுந் திசைக்கு எதிரிலிருந்த சேதுவுக்குச் சம்பந்தமாகயிருக்கும் சக் கரதீர்த்தமானது வெகு விஸ்தாரமாய்ப் பத்துநாழிகை தூரப்பரப் பும் ஆழமுமுள்ளதாயிருந்ததைக்கண்டு குபீலென்று அத்தடா கத்திற்பாய்ந்து அழுந்திவிட்டானப்போது பின்தொடர்ந்துவந்த தேவியானவள் அசுரனைக்ககாணாமற் றிகைத்து எவ்விதமாயையி னாலோ மறைந்தானென்று யோசித்துக்கொண்டு வந்தவழியைப் பார்க்க வடக்குமுகமாகத் திரும்பியந்தச் சக்கரதீர்த்தக்கரையி லேநிற்கும்போது மகிஷாசுர னித்தடாகத்திலொளித் திருக்கிறா னென்று ஆகாயத்தில் அசரீரிதொன்றியது கேட்டவுடனே தன் னுடைய வாகனமாகிய சிங்கத்தையேவ அச்சிங்கமானது தடா கத்தில் வாயைவைத்துச் சலத்தையெல்லாஞ் சேறுபடக்குடித்த மையால் அப்போது அசுரன் பதுங்குவதற் கிடமின்றி வெளிப் பட்டான்.

உடனே துர்க்கியானவள் கண்டு விடப்படாதென்றுருத்ரா காரமாய் ஆக்ரமித்து எழும்பி அண்டரண்டபட்சியானது யானை களின்மீதுபாய்ந்து காலினாலிடுக்குவதுபோல் மகிஷாசுரன்மீது பாய்ந்து ஓர்கால் உடலத்திலும் ஓர்காற் சிரத்திலுமூன்றிச் சூலத் தினாற் குத்திப்புரட்டி கத்தியினால்வெட்டி அவனது உடலத் தைக் காலாலெற்றின மாத்திரத்தில் மகிஷாசுரன் யுகாந்தகாலப் பேரொலிபோ லிரைச்சலிட்டுக்கொண்டு இரத்தங்களைக் குபீல் குபீலென்று கக்கிக்கொண்டு மரணமடைந்தான். அதுகண்டதேவி யுந் தனது வளாயுதத்தினாலே அவனுடைய வுடல்வேறு கால்வே

ருக வெட்டி யெறிந்து தலையைக் காலால் மிதித்துக்கொண்டு ரௌத்ராகாரமாய்த்தனது தேகமனைத்துஞ் சிவந்து செக்கர்வானம்போற் பிரகாசித்தாள், அதுகண்டதேவர்களெல்லாம் ஆச்சரியங்கொண்டு மெத்தவும் சந்தோஷத்தோடுங் கற்பகமலர்களைத் தேவியின்மீது சோனைமாரிபோற் சலசலவென்றுவருஷித்தார்கள், அவ்வாறு வருஷித்ததன்றியும் தேவர்களுக்கு இவ்வசுரன் மரணமடைந்தது எப்படியிருந்ததென்றால் இரண்யாட்சதர் களைப்போலொருகோடி பேர்கள் தாருகாசுரனைப்போலொருகோடிபேர்கள் மடிந்தால் எவ்வளவு களிப்புண்டாகுமோ அதற்கெண்மடங்கதிகமாகிய சந்தோஷங்கொண்டு தேவியைத்துதித்துப்பாடி ஆனந்தக்கூத் தாடினார்கள். அதன்றியும் பூதவேதாள பைசாசகணங்கள்முதலிய யாவும் மலையைப்போற்குவித்திருக்கும் மகிஷாசுரனது இரத்தமாமிசங்களைத் தின்று இன்று நமக்கு நல்ல விருந்தென்று சொல்லிக் கூத்தாடின சர்வலோகங்களிலுமுள்ள சீவாத்துமாக்களுஞ் சந்தோஷமடைந்தார்கள்.

அப்போது தேவர்களெல்லாமொன்றுகூடிமகிஷாசுரனைச்சங்கரித்த மாதேவிக்குச் சக்கரதீர்த்தக்கரையிலே ஆலயமும் பட்டணமுமுண்டாக்கி அதிற் குடிகளையேற்றி அதற்குத்தேவிபட்டணமென்று பெயரளித்து தேர் திருவிழாமுதலிய யாவுமுண்டாக்கி. மகிஷாசுரவர்த்தனியென்று பெயர்கொடுத்து தேவியைப் பூசித்து வணங்கி எங்களுக் கெவ்வித இடுக்கண்வந்த போதிலும் தீர்க்க வேண்டுமென்று வரப்பிரசாதமும் பெற்றுக்கொண்டு அவரவர்களுடைய இருப்பிடங்களுக்குப்போய்ச்சேர்ந்தார்கள் பின்னும்அன்றுமுத லந்தப்பட்டணத்திலே யாதொரு குறைவுமில்லாமல் சகலருக்கு மிஷ்டசித்திகளைத்தந்து வெற்றியைத்தருவதுமன்றி அச்சக்கர தீர்த்தமானது சிங்கங்குடித்து சுவறிப்போனமையால், தேவி தனதருளால் அமுர்தம்பெருகச்செய்துசகலருந் தீர்த்தமாடும்படி உபயோகப்படுத்தினபடியால் இதற்கு அமிர்ததீர்தமென்னும் பெயர் கொடுத்து அதில் மூழ்கினபேர்களுக்கு நினைத்த காரியங்களெல்லாம் கைகூடிவரும்படியாய்ச் செய்தும், மோட்சசாம்பிராச்சியமும் கொடுக்கும் தேவிபட்டணமுண்டான வர்த்மானம் இத்தகையதென்றுந் தேவிப்பட்டணத்தில் ஸ்ரீராமச்சந்திரன் திருவ

ணைக் கட்டும்போது முன்னர்க்கணேசரையும் நவக்கிரகங்களையும் பூசித்து சேதுபந்தன் ஞ்செய்யவாரம்பித்தார்.

அப்போதந்த தேவதச்சனுகிய நளன் ஸ்ரீராமசந்திரசுவாமிக்கு ஒரு சிங்காசனம்செய்து கொடுத்து அதிலே ஸ்ரீராமசுவாமியையெழுந்தருளி யிருக்கும்படிசெய்து பின் ஐந்துநாளைக்குள் சேது வைக்கட்டிமுடித்துச் சகல தேவ சொரூபமான வானர்களும் ஸ்ரீராமச்சந்திரனது பிரசாதமுங்கூடிய திருவணையினது தொடக்கத்துக்கு கீழ்ப்பாகத்திலே ஸ்நானவிதியின்படி யாத்திரை செய்யப்பட்டவர்கள் முதல் கணேசைரப் பூசித்துப் பின்பு சேதுமூலத்தில் ஸ்நானஞ்செய்து க்ஷேத்திராபிண்ட முதலியவைகொடுத்துப்பிறகுசக்கர தீர்த்தத்தில்மூழ்கி அங்கும் க்ஷேத்திரபிண்ட முதலானவைகள் செய்து சேதுவுக்குநாயகனுகிய ஸ்ரீராமச்சந்திரனைப் பூஜித்து கிரமப்படி ஸ்நானஞ்செய்து ஜபதபநிட்டைகள்அநுட்டிப்போர்களுடையசென்மாந்தரங்களிற்செய்தகர்மா நுபவங்களும் நீங்கிமோட்சத்தைபடைவார்கள் அதன்றியும் தர்மபுஷ்கரணியென்னும் தீர்த்தத்துக்குச்சமமானது எவ்வுலகத்திலுங் கிடையாது.

உலகிலுள்ள சகலநதிகளிலுமூழ்கிலும் இத்தீர்த்தத்திலாடிய புண்ணியபலத்தில் பதினறிலொருபங்குக் கீடாகாது யாத்திரைசெய்கின்றவர்கள் முன்பு நவபாஷாணமாகிய சேதுமூலத்தில் மூழ்கிய பின்புசக்கரதீர்த்தத்திலாடி இவ்விரண்டிடங்களிலும் க்ஷேத்ரபிண்டங்கொடுத்து தர்ப்பணங்கள்செய்து ஸ்ரீராமனைப்பூசித்துவணங்கி அப்பால் தர்ப்பசயனத்திற்குப்போய் நளனுலேநியமிக்கப்பட்டசிங்காசனத்தைத் தெரிசித்தவர்கள், நரகவேதனையடையமாட்டார்கள் ஆதலால் அதன்மகிமையை இன்னும் கேளுங்கள் யாதெனில்அந்தச்சேதுவானது மோட்சமார்க்கத்துக்கேதுவாகி சீதாலட்சுமியினது இதயகமலத்தை விகசிதம்செய்வதற்கு இளஞ்சூரியனைப்போல் விளங்கிக்கொண்டிருக்குமென்று சூதபுராணிகர் சொல்ல மறுபடியுஞ்சொல்லுவார். கேளுங்கள் முனிவர்களே இத்தன்மைவாய்ந்த சேது மூலத்திலேவிளங்குஞ் சக்கிரதீர்த்தத்திலே மூழ்கிப்புண்ணியர்கள் அதற்கு தக்ஷிணபாகத்திலிருக்கும் வேதாள வரதீர்த்தம் ஆடவேண்டிய விதியாதலால் அத்தீர்த்தத்துக்கு உத்தரபாகத்தில் சக்கரதீர்த்தமும் தட்சிணபரிசங் கந்தமாதனபருவதமும் விளங்கிக்கொண்டிருக்குமென்று சூதமுனிவர்சொல்ல அதைக்கேட்டு

ஆனந்தங்கொண்ட நைமிசாரண்யமுனிவர்கள்சுவாமி! அத்தீர்த்துக்குவேதாளத்தீர்த்தமென்று பெயர்வந்த காரணத்தையும் அதன்மகிமையையும் அடியேங்களுக்கு திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று பணிந்துகேட்கச் சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

தேவிபுரச்சரித்திரம்.

முற்றிற்று.

---

உ
சிவமயம்,

## வேதாள வரததீர்த்தம்.

கேளுங்கள்நைமிசாரண்ணியவாசிகளாகிய முனிவர்களே ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்த சின்மயஸ்வரூப சாட்சாத்காரமாகி விளங்குஞ் ஜகதீசன், கயிலாசவாசன், உமாமகேசன், பவநாசன் தனது மங்கையாகிய பர்வதராஜகுமாரிக்குரைத்த கதையை யாம் உங்களுக் குரைக்கின்றோம் - அதாவது தண்டகாரண்யத்தில் வாசமாயிருக்குங் காளவமகாரிஷியானவர் பஞ்சாக்னியுடன் நின்று சபஞ்செய்துகொண்டிருக்குங்கால், அவர் புத்திரியாகிய காந்திமதியென்பவள் அதிரூபலாவண்ய சவுந்தரியத்தோடுங் கூடியிருப்பவள், அவள் நித்தியபடியாய்த் தனது தந்தையாகிய காளவ ரிஷியின் தேவபூசைக்கு வேண்டிய தீர்த்தம் பத்திரம் புஷ்பஞ் சமித்து முதலாகியவைகளைக் குறையின்றிக் கொண்டுவந்து கொடுத்துப் பணிவிடைசெய்துகொண்டுவருவாள். அதுபோல ஒருநாள் வனத்திற்பிரவேசித்துப் பத்திரபுட்ப மெடுத்துக்கொண்டிருக்கும்போது. காந்தர்வலோகத்திலேயிருந்து சுதரிசனன் சுகன்னன்என்னு மிரண்டுகாந்தருவச்சிறுவர்கள் நவமணிவெயில்பரப்பி யிலகாநின்றவிமானத்தோடு ஆகாயவீதியிற்செல்பவர்கள் இப்பெண்ணினுடையரூபலாவண்யசவுந்தரியத்தையும் அன்னப்பேடைபோன்ற நடையையும் கண்டு மயங்கி மூத்தவனாகிய சுதரிசனனென்பவன் தன்னுடைய விமானத்தை

விட்டு பூமியிலிறங்கி அந்தப் பெண்ணிடத்தில் வந்துஓபெண்பா வாய் இவ்வனத்திலிருக்கும் நீ யார் உன் தந்தையார் பெயரென்ன சொல்லுவாயென்று கேட்க அதற்கவ ளொன்றுஞ் சொல்லாமல் மவுனமாக விருந்தும் அவ்வித்யாதரன் துராக்ருதமாய் வாராய் பெண்கள் நாயகமே எனக்கு உன்மீது மிகவும் மோகமாயிருப்ப தால் நான் காந்தர்வலோகத்திலே விஞ்சையர்களுக் கரசனுகிய கோசரனுடைய குமாரன், என்பெயர் சுதரிசனனென்று சொல் வார்கள் யான் மன்மதனுடைய அஸ்திராக்கினியால் வெதும்பித் துன்பப்படுகின்றமையால் அதைத் தவிர்த்தாட்கொள்ள வேண்டு மென்று வெகுவாய் வருந்திப் பிரலாபமுற்ருன், அதுகேட்ட அப் பாவை கூறுவாள் வாரும் சுதரிசனனே நான் தண்டகாரண்யத் தில் தவஞ்செய்துகொண்டிருக்குங் காளவமகாரிஷீயினுடைய குமாரத்திஎன்பெயரோ காந்திமதி யென்று சொல்லுவார்கள், யான் அருடைய பூசைக்குப் பத்திர புட்பம் குசை முதலான வைகள் கொண்டுபோய்க் கொடுக்கின்ற வழக்கமாதலால் இன்றை க்கு வெகு நேரந்தாமதப்பட்டு விட்டது.

அவரது பூஜாகாலத்துக்கு கணப்போது தாழ்க்குமாயின் கோபித்துச் சாபங்கொடுப்பாராதலால், அவ்வாறு நடந்த பின் னே பேதையாகிய எனக்கு கதியாது ஆனதால் நீர் என் தந்தை யிடம்வந்து என்னைக் கேட்டு மணம்புரிந்து கொள்ளு மென்று சொல்லிக் காளவரிருக்கும் பன்னகசாலையை நோக்கி நடந்தாள் அப்போது சுதரிசனனும் பின்றொடர்ந்து துராக்ருதமாய் அவள் கூந்தலைப்பிடித்துத்தூக்கிக் கொண்டு போகும்போது காந்திமதி கோவென்றலறிக்கூக்குரலிட அவ்வோசையைக் காளவமகாரிஷீ கேட்டு பன்னகசாலையை விட்டோடி வந்து தன்மகளை விடுவித் துக் கோபாவேசத்துடனே சுதரிசனனைப் பார்த்துச் சொல்லு வார் அடாபாதகனே நீ மலமுத்திர நாற்ற மாமிசங்களுடனே கூடி னபெண்ணின்மீது மோகமாய் சற்று மஞ்சாமற்பூதவேதாளங்களை ப்போற்பற்றி யிழுத்து வருத்தியதனல் நரனுகப் பிறந்து வறுமை யடைந்து பின்னர் வேதாளமாகவும் உன்னுடைய தம்பி நரனுகவு மின்பதுன்பங்களையனுபவித்து அப்பால் விஞ்சையர்க் கரசனுன விக்கின கவுத்திகனைநீங்கள் காணும்போது உங்களுக்கு இச்சாப விமோசனமாகு மென்று சொல்லிச் சீடர்களுடனே தன்மகளையு மழைத்துக் கொண்டு பன்னகசாலையைப்போய்ச் சேர்ந்தார்.

அப்பால் சுதரிசனனும் அவனுடைய தம்பியும் மிகவுந் துன்பமடைந்து தங்களுடைய லோகம்போய்ச் சேர்ந்து இருவரும் பூமியிற் பிறக்க வேண்டியதற்கு யோசித்து யமுனாதீரத்திலே கோவிந்த சுவாமி யென்னும் பிராமணனுக்குப் பிள்ளைகளாய் மூத்தவனை விசயதத்தனென்றும் இளையவன் அசோகத்தனென்றும் பிறந்துவளர்ந்து வருகின்றபோது அந்த யமுனாதீரத்தில் மழையில்லாமல் பன்னிருவருடம் பஞ்சமுண்டாய்ப் பிரஜைகள் துன்பமடைந்து சீவனத்துக்கிடமின்றி இறந்தபேர்கள் தவிர மற்ற பேர்கள் திசைக்கொருவரா யோடிப்போனார்கள்.

அப்போது கோவிந்தசுவாமி யென்னும் பிராமணன் தனது பெண்சாதிபிள்ளைகளை யழைத்துக் கொண்டு காசி நகரத்திற் கருகே வரும்போது சூரியனஸ்தமாகிவிட்டபடியாலும் பசியின் கொடுமையினால் நடப்பதற்கு அசக்தர்களாய் மிகுந்த இளைப்போடும் கால்கள் பின்னலிட அவ்விடத்திலுள்ள கபாலமாலாபரணன் என்னும் ஒரு தபோதனருடைய பன்னகசாலையைக் கண்டு அதிற்போய்ச்சேர்ந்து அங்கிருக்கு முனிவரைக் கண்டு பணிந்து தங்களது குறையனைத்துஞ் சொல்ல அம்முனிவர் இரக்கமுற்று அவ்வேதியனை நோக்கி ஒப் பிராமணோத்தமா உனது தந்தை மெத்தவும் நல்லவரென்று எமக்குக்கேள்வி உமக்குஈஸ்வரன் பிள்ளைகளையும்தாரித்திரத்தையுங்கொடுத்திருக்கிறார், உனக்கும் பிரிவுண்டாகும் வினைப்போகங்களை யனுபவிக்கவேண்டியிருப்பதால் அனுபவித்தேதீரவேண்டும் இதோ நம்மிடத்திலிருக்குமுணவைப்புசித்து பசியாறுங்களென்று கொடுத்த அன்னத்தைப் பெண்சாதிபிள்ளைகளுடன் உண்டு ஜலபாணஞ்செய்து அந்த முனிவரிருந்துதவஞ்செய்கிறஆலமரத்தருகேஒருபாழுங்கோயிலில்சயனித்துக்கொண்டிருக்கையில் நள்ளிருளில் மூத்தமகனாகிய விசயதத்தனென்பவனுக்கு குளிருங்காச்சலுமுண்டாகஅதனாற் சகிக்கலாற்றாதவனாய்த் தன்தாயையெழுப்பி இவ்வேளை நெருப்பெடுத்து வந்து விறகுகள்தேடி நெகிடிபோட்டாலொழிய வென்பிராணன் தரியாதென்று சொல்லுவதைக் கேட்ட பிராமணன் புத்திரவாஞ்சையால் அவ்வேளையில்எங்குந்தேடியுங் கிடைப்ப தரிதாகவிருந்தமையால்எங்குங்கிடைக்கவில்லையே யென்செய்வேன் சுதனேயென்று துயரப்பட அப்போவிசயதத்தனென்னுஞ் சிறுவன் பெருந்துன்பத்துக் குள்ளானவனாய் தன்

தந்தையைப்பார்த்து நீர் பொய்சொல்லுகின்றீர் அதோ வெளிச்சம் புலப்படுகின்றமையால்எவ்விதமேனும்போய்க் கொண்டுவாருமென்று சொல்ல அதுகேட்ட பிராமணன் அடாகுழந்தாய் நீசொல்லுகிறதுஉண்மைதான் அதுசுடலைக்கரையாதலாலும்அங்கோர்சவசரீரம் வேகின்றமையாலும்அத்தீயினைத்தொடப்படாதென்றும் யேனெனில் அப்புகைவந்துதேகத்திற்படிந்தால்ஆயுளுஞ்சிரணமாவதோடும் விபாதிகளும் விசேஷப்படுமென்றும் தகப்பனுனபிராமணன் சொல்ல, அதுகேட்ட விசயதத்தன் அத்தோ நீரென்னை யநியாயமாய்க்கொல்ல நினைக்கின்றீர் அச்சவத்தைச் சுடுந்தியே இந்த வேளையி லென்னைக் காப்பாற்றும் போய்க் கொண்டுவாருமென்று சொல்ல, அதுகேட்ட பிராமணன் மிகவுந் துன்பத்தோடும்புத்திரசோகத்தால் எழுந்துமயானத்தைநோக்கிப்போகையில்விசயதத்தனும் யானும் வருகிறேனென்று பிறகேசெல்ல அப்போது பிராமணன் பிணம்வைத்தெரிகிற விடத்திற்போய் அந்தச் சவநெருப்பில் குளிர்காயச்செய்து புதல்வனுக்குஇதஞ்செய்தபிறகு அப்பிணத்தின்தலைமூளையில் அக்கினிபிடித்துப்பச்சைவர்னமாகவும், நீலவர்னமாகவும் பிரகாசந்தோன்றுகின்றதைவிசயதத்தன்கண்டுதகப்பனைப்பார்த்து ஐயா இதுவென்ன இப்படியாகப் பிரகாசிக்கின்றதென்றுகேட்க அப்போது தந்தையானவன் புத்திரனைப்பார்த்து அடாகுழந்தாய்அந்தப்பிணத்தினது தலையிலிருக்கும் மூளையில் அக்கினிபிடித்தெரிகின்றமையால் அவ்வாறுஒளிதோற்றுகிறதென்றுசொல்ல அதுகேட்ட விசயதத்தனென்பவன் உடனே யொரு கட்டையையெடுத்து அப்பிணத்தின் தலையிலடிக்க மண்டையானது தெரித்து அம்மூளையிற்கொஞ்சம்தன்உதட்டின்மீதுபட, அதனைவினைப்போகத்தினல் அதியாவலோடும் நக்கிச் சுவையா யிருந்தமையால் மறுபடியும் அந்த மண்டையைக் கையிலெடுத்துக்கொண்டு அதிலிருந்த மூளையனைத்தையும் புசிக்க உடனே வானத்துக்கும்பூமிக்குமொன்ருய்நீலகிரிபோலகாத்திரமான உருவங்கொண்டுமூன்ரும்பிறையைப்போன்ற வக்ரதந்தங்களும் சிவந்தமயிரும்உருண்டகண்களுமாய் வேதாளரூபத்தோடும் அண்டகடாங்களெல்லாமதிரும்படி கெர்சித்துப் பாய்ந்து அவன் வெந்துகொண்டிருக்கும் பிணத்தைத்தூக்கிவாயிற்போட்டுக்கொண்டு அங்கிருந்த தனது தந்தையாகிய பிராமணனையும் பட்சணஞ்செய்ய நினைந்து நெருங்கும்போது ஆகாயத்தினின்றும் அவனைத்தொடவேண்டாமென்ருெரு அசரீரி

யுண்டானமையால் அவ்வோசையைக் கேட்டவுடனே பயந்து அகலச்சென்று ஆகாயமார்க்கமாய்த்தாவி அம்மாசானத்திலுள்ள காளிகூளிபூதப்பிரேதபைசாசகணங்களுக்கு அரசன்மகிழும்படியானகாணிக்கையாகி கபாலபோடனென்னும் பெயர்பூண்டு நாரத்திபூடணனென்னும் வேதாளராசனிடத்திற்போய்ச்சேர்ந்து அவனுடையசேனைகளுக்கெல்லாம் சேனுபதியாயிருந்தான்.

இப்படியிருக்கும்போது அந்த வேதாளராசனுகிய நாரத்திபூடணன் சித்திரசேனனென்பவனுல் மடிந்துவிட்டபடியால்இக்கபாலபோடன் அப்பட்டத்துக்குரியவனுயிருந்து சஞ்சரித்துக்கொண்டிருக்கும்போது முன்னர்அம்மயானத்திலிருந்தகோவிந்தஸ்வாமியென்னும் பிராம்மனன் தனது பிள்ளைக்கு நேர்ந்தகாரணத்தைநோக்கிமகா விசனத்தோடும் மயானத்தைவிட்டுநீங்கித் தாங்களிறங்கியிருந்த பாழுங்கோயிலைச்சேர்ந்துதனதுபாரியாளிடத்திலும்இளையகுமாரனுகிய அசோகதத்தனிடத்திலும் நடந்தசவிஸ்தாரங்களையாதியோடந்தமாய்ச்சொல்லிக்கொடுந்துன்பத்தோடுந்தங்கள்மணத்தைத் தாங்களே தேறுதல்செய்துகொண்டு அவணின்றும்பிரயாணப்பட்டுக் காசிநகரத்திற்சேர்ந்து ஒருவருடகாலம்வரையில் முஷ்டியெடுத்து ஜீவித்துக்கொண்டிருக்கையில் தனக்கு நெடுநாள்நேசனுகவிருந்த சமுத்திரதத்தனென்னுமோர் செட்டியைக்கண்டு தனக்குற்ற துன்பங்களையெல்லாம் அவனுடன் சொல்லித் துன்பப்பட அவனும் விசனமடைந்து பிராமணனுக்குத் தேறுதலை சொல்லித் தன்னிடத்தில்வைத்துக்கொண்டு அன்னவஸ்திரங்களுக்குக்குறைவின்றிப்பாதுகாத்துவருகையில் அம்மறையவனுடைஇளையகுமாரனுகிய அசோகதத்தனென்பவன் அவன்மரபுக்குறியவேதசாஸ்திரபுராணங்களியாவு மோதியுணர்ந்ததன்றியும் க்ஷத்திரிய தர்மத்துக்குரிய தநுர்வேதங்களையுங்கற்று மகாவல்லவனுய் ஒப்புயர்வில்லாதவனுகியும் யாவரும் சந்தோஷமுறும்படி வல்லமைபொருந்தியிருப்பதை யந்நகர்வேந்தன்கேட்டு சந்தோஷித்து அசோகனை வருவித்து பலவகையிலுமவனைபரீட்சித் தவரது பராக்கிரமத்துக்குமெச்சிபரிசிந்துதன்னிடம் வைத்துக்கொண்டிருக்குங்கால் தென்றிசையிலிருந்து ஒருமல்லன்வந்தான் அவனைக்கண்டுராசசமுகத்திலுள்ள மல்லர்கள் அஞ்சஅரசன்அசோகதத்தனைநோக்கிஇந்தமல்லனைவெல்வையாயின் உனக்குவேண்டியவற்றை தருவேனெனஅப்படியே

அந்தமல்லனை ஓர் அறையினாலே கொன்றுவிட்டதைக்கண்ட அரசனுக்கு உயிர் துணைவனாய் வைத்துக்கொண்டான் அங்ஙனமிருக்கையில் ஒருநாளிவ்விருவரும் வேடிக்கையார்த்தமா யிரண்டு குதிரைகளின் மீதேறி வனத்தை நோக்கிச் சாரிமார்க்கமாய் வனத்துள் நெடுந்தூரங் குதிரைகளை விடுத்தப்போது பொழுதுபோய் விட்டது கண்டு திரும்பி வருகையில் அவ்வனத்திலிவ்வரசனது ஆஞ்ஞையாற் கழுவேற்றப்பட்டிருக்கு மொருவன்எட்டுதினமாய் அக்கழுவினின்று மரணமாகாமற் பிராணாவஸ்தை யனுபவித்து நாவறட்சிக்கொண்டு இன்னாரென்றிவர்களை யறியாதவனாய்ஐயா புண்ணியர்களே! பாபியாகிய வெனக்கு இவ்வேளை ஜலந்தருவீர்களாகில் பெரும் புண்ணியமுண்டாமென்று கூறியதைக்கேட்டஅரசன் அசோகதத்தனைப்பார்த்து அப்பா இவன்படும் பிராண வேதனைக்கு இவ்வேளை ஜலந்தேடிக்கொடுப்பது அரிதாயிருப்பதாலும் கொஞ்சம்பிரயாசையெடுத்துக் கொண்டு ஜலமிருக்குமிடந்தேடிக் கொண்டுவந்து அவனருந்தியபின்னர்வந்துசேரக்கடவையென்றும் போதுபோய் விட்டமையால் நான் நகரத்திற்குப் போய் சேருகிறேனென்றுஞ் சொல்லித் தான் குதிரையை வேகமாய் விட்டுக் கொண்டு பட்டணம்வந்து அரண்மனை போய்ச் சேர்ந்தான்,

பின்னர் அசோகதத்தனானவன் அரசனது ஆஞ்ஞையின்படி அவ்வனமுழுதுஞ் சுற்றித்திரிந்து ஒரு தடாகத்தைக் கண்டுபாத்திர மில்லாமையால் அக்கானகத்துள்ள தேக்கிலையைப் பறித்து தொன்னைப்போல் தைத்து அதிற்சலத்தை முகந்து கொண்டுகுதிரையேறிக்கழுவை நாடிவருகையிலே அக்கழுமரத்தினடியில் மிகவும் ரூபலாவண்யத்தோடுங் கூடியவொரு பெண்ணானவள் படுத்திருந்து இவன் வருதலைக் கண்டெழுந்திருக்க அப்பெண்ணை நோக்கி அசோகதத்தனானவன் ஓபெண்பாவாய்நீயார் நீயிங்கிருப்பதற்குகாரணமென்னவென்று கேட்க அம்மாது ஐயா நான் இக்கழுவிலிருப்பவரது மனையாளாதலால் எனது கணவன் இக்கழுவினின்றும் பிராணன் விடுத்தவுடனே யானும் பிராணனை விடுவதற்கு எண்ணங்கொண்டு எட்டுநாளாய் வந்து காத்திருக்கின்றேன் அவர் தாகவிடாயைத் தணிப்பதற்குங் கழுமரம் உயர்வாயிருப்பதால் யாதும் வகையில்லாமல் வருந்துகிறே னென்று சொல்ல அதைக் கேட்ட அசோகதத்தன் இவள் உண்மையானவளென்று மதித்துத் தன்னிடமிருந்த ஜலத்தை யவளிடங்கொடுத்து இதனை உன் புருஷனுக்குக் கொடுத்துத் தாகத்தைத் தணிப்பா யென்று

சொல்ல அதற்கவள் ஐயா கழுமரம் உயர்வாயிருப்பதால்எவ்வாறு எட்டிக் கொடுப்பேனென்று சொல்ல அதற்கு அசோகதத்தன்சொல்லுகிறான்.

ஓ பெண்பாவாய் நானிந்தக் கழுமரத்தடியில் நிற்கின்றேன் நீ எனது தோளின் பேரிலேறி நின்றுகொண்டு உன் கணவனை ஜலமருந்தச் செய்வாயென்று சொல்ல அதுபோலவளும் இவன் றோளின்மீதேறி நின்று. தனது கணவனுக்கு ஜலத்தைக்கொடுத்துக் கழுவிற்றொங்கு மவனுடைய தேகத்திலிருந்து பெருகுமுதிரத்தை வாயினலைவளரியும்போது இதுவென்ன வென்றுஅசோக தத்தன் அண்ணாந்து பார்க்கையில் அவள் ராட்சத வுருவங்கொண்டு கர்ச்சித்து ஆகாயவீதியி லெழும்பும்போது அவளது கால்களை கெட்டியாய்ப் பற்றி யிருந்தவ னைகையால் இவனுமாகாயத்தில் கூடவே கிளம்பி யவள் காலிலிருந்த சிலம்புகளிலோர் காற்சிலம்பு விடுபட்டு இவன் கையிற் சிக்கி அச்சிலம்போடும் பூமியில் லகுவாய் குதித்து இம்மரத்தடியிற் படுத்திருந்தவளை யரக்கியென்றறியாமல் மோசம்போனேமே யென்று மனத்தைத் தேற்றிக்கொண்டு குதிரைமேலேறி சிலம்போடும் பட்டணம்போய்ச் சேர்ந்து தான் கொண்டுவந்த சிலம்பை யரசனிடங்கொடுத்து நடந்த விஸ்தாரங்களை ஆதியந்தமாய்ச் சொல்ல அது கேட்ட அரசன் அசோக தத்தனுடைய தைரிய பராக்கிரமத்துக்கு மெத்தவும் சந்தோஷமடைந்து தனது புத்திரியாகிய மதனரேகை யென்பவளை அவனுக்கு மணம்புரிய அதுபோலவனும் அப்பெண்ணை மணந்து அவ்வரசனுக்கு மருகனாகி வாழ்ந்து வருநாளில் ஒருநாள்அசோக தத்தனது மாமனாகிய வேந்தன் இவனாற் கொண்டுவந்து கொடுக்கப்பட்ட பொற்சிலம்புக் கிணையான சிலம்பு சம்பாதித்துத் தன்னுடைய தேவிக்குக் கொடுக்கவேண்டு மென்னு மாசையோடுங்கூடிச் சொல்லிக் கொண்டிருக்கையில் அதைக்கேட்ட அசோகதத்தன் யோசித்து இதற்கிணையாகிய சிலம்பைக் கொண்டு வருகிறேனென்று பிரயாணமாகி வரும்போது தங்கிய கோயிலைச் சார்ந்த மயானத்திற்கு நடுஜாமராத்திரியிற் போய்ச் சேர்ந்துதனக்குத்தெரிந்த மந்திரதந்திரங்களைப் பிரயோகஞ்செய்து டாகினிமுதலாகிய பூதவே தாளங்களையும் பேய் பசாசங்களையும்வரவழைக்க அதனோடும் கழுமரத்தடியிலிருந்து இராட்சதவுருவத்தோடும்ஓடிப்போன

அரக்கியும் வந்து நிற்க; அவளைக்கண்ட அசோகதத்தன் மந்திர பீசங்களால் கட்டிக்கொண்டு வாரும்பெண்ணே நீ முன் என்னை விட்டுப் போகின்றபோது தவறிப்போட்டு விட்டுப்போன வுனது சிலம்பில் ஒருசிலம்பு என்னிடத்தி லிருப்பதால் மற்றொரு சிலம் பையுங் கொடுப்பாயென்று கேட்க அதுகேட்ட அரக்கியுஞ் சந் தோஷித்து அவனுடைய சவுரிய பராக்கிரமங்களைக் கண்டு அதி சயித்துதன்னிட மிருந்த பொற்சிலம்பைக் கொடுத்தோடும் அவ னது பராக்ரமத்துக்கு மெச்சிப் பொற்றாமரை மலரொன்றையும் தன்னுடைய குமாரத்தியாகிய வித்துத்துப் பிரபையுங் கொடுத் துப் போய்வாருமென்று சொல்ல அப்படியே அசோகதத்தன் மகா சந்தோஷத்தோடும் சிலம்பையெடுத்துக் கொண்டு வித்துத் துப் பிரபையென்னும் பெண்ணுடனே காசிப்பட்டணம் வந்து சேர்ந்து அரசனைக் கண்டு தான்போய் வந்த சங்கதிகளை ஆதி யோடந்தமாகச் சொல்லிச் சிலம்பையு மரசனிடங் கொடுத்துச் செலவு பெற்றுக்கொண்டு வித்துத்துப் பிரபை யென்பவளைதனது பத்தினியாகிய மதனரேகையுடனே சேர்ந்து சுகமாய் வாழ்ந்து வரு நாளில் ஒருநாள் வித்துத்துப் பிரபை யென்பவளும் அசோ கதத்தனும் அம்ஸதூளிகா மெத்தையில் சயனித்துக் கொண்டிரு க்கும்போது அவள் குழலிலே தரித்திருந்த பொற்றாமரை மலரை க்கண்டு ஆச்சரியங்கொண்டு அடிபெண்ணே இந்தப்பொற்றாமரை மலருனக்கே தென்று கேட்க அதற்கு வித்துத்துப் பிரபையான வள் நாயகா இம்மலர் இப்பட்டணத்துக்கு அருகிலுள்ள வனத் திற் கபாலபோட னென்னும் வேதாளத்தினது பூந்தோட்டத்தில் பொய்கையில் உண்டாயிருக்கிறதென்றும், யாரோ கொண்டு வந் து உன் மாமனாகிய வேந்தனுக்குக் கொடுத்தாய் எங்களுக்குக் கொடுத்தனுப்பினு ரென்று சொல்ல அதுகேட்ட அசோகதத்தன் வேதாளமாவது பூந்தோட்டமாவது பார்ப்போம்வருவாயென்று கூட்டிக்கொண்டு அந்தப் பட்டணங் கடந்து வனத்தில் பிரவே சித்து வேதாளம் வாழ்ந்துவரும் வனத்திலே பூங்காவைக்கண்டு அக்காவிலிருக்குந் தடாகக்கரையின் மீதுவந்து நின்றார்கள்.

அதுகண்ட அப்பூங்காவின் காவலாளிகளாகிய பூதப்பிரேத கணங்கள்கோபங்கொண்டு கொல்லுவதற்கு நெருங்கியட்டகாசஞ் செய்வதைக்கண்ட அசோகதத்தன் சிங்கம்போல் பாய்ந்து தன னிடத்திலிருக்குஞ் சந்திராயுதத்தினல் அவைகளைச் சின்னபின் னங்களாய் வெட்டிச் சிதைதது தலைவிரிகோலமாய் நான்கு திக்

கினு மோடும்படி செய்ய அப்போது அவைகள் மிகவு மச்சங் கொண்டோடித் தமது இறைவனுகிய கபாலபோடனிடத்தில் முறையிட அம்முறைப்பாட்டைக்கேட்ட வேதாளமுங் கோபாவேசங் கொண்டுகர்ச்சித்ததாரவாரத்தோடும் அசோகதத்தனை யெடுத்து விழுங்குவதற்கு நெருங்கின அப்போது அசோகதத்தன்மந்திரவாளை யுருவிக்கொண்டு வேதாளத்தைச் சின்னுபின்னமாகும்படி வீசி மயங்கச் செய்து கொல்லவேண்டுமென்று வாளையுருவியோங்குகையில் அப்போது ககனமார்க்கத்திற் செல்லும் விக்கினகவுத்திகனென்னும் விஞ்சை யரசன் கண்டு அடா அசோக தத்தாவேதாளத்தை வெட்டிக் கொல்லாதே யென்முன் அதுகேட்டவுடனே ஆகாயத்தை நோக்குகையில் விஞ்சையரசனுன விக்கினகவுத்திகனைக் கண்ணினுற் கண்டான். அவ்வாறு கண்டவுடனே யிவன் சாபம் நீங்கித் தன் நினைவுண்டாகிப் பழைய சொரூபமுடையவனுன் சுகன்னனைப் பார்த்து வாரும் பிள்ளாய் சுகன்னனே இந்த வேதாள சொரூபம் பெற்றுள்ளவன் உமது தமயனுகிய சுதரிசுனனுதலால் உங்களுக்கு காலவரிஷியினுடைய சாபத்தால் இப்படி நேரிட்டிருந்தது அதில் உனக்கு என்னைக் கண்டவுடனே சாபவிமோசனமாயிற்று உனது தமயன் சாபந்தீரவேண்டி யிருப்பதால் ஆதியிற் பிரமதேவன் சனகாதியர்களுக்குச் சொல்லியிருந்ததை உனக்கு நான் சொல்லுகிறேன் கேட்பாயாக யாதெனின் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியினுற் கட்டப்பட்டு விளங்குஞ் சேதுவிற் சக்கரதீர்த்தத்திற்குத் தென்பாகத்திலே ஒரு புண்ணியதீர்த்தமுளது அப்புண்ணிய தீர்த்தத்திலே இவ்வேதாளத்தைக் கூட்டிக் கொண்டு போய்த் தீர்த்தமாடும்படி செய்துவைத்தால் இதனுடைய சாப விமோசனமாமென்று சொல்ல அதுகேட்டசுகன்னனும் மந்திர சக்தியினுல் வேதாளத்தையழைத்துக் கொண்டுதென்றிசையை நோக்கிச் சொல்லும்போது விக்கின கவுத்திகனும் ஆகாயவீதியில் விமானத்தை விடுத்துக் கொண்டு தனதுலகம்போய்ச் சேர்ந்தான் அக்காலையில் சுகன்னனுவன் சக்கரதீர்த்தத்திற்குத் தென்பாலுங்கந்தமாதனத்திற்கு வடபாலு மிருக்கும் புண்ணிய தீர்த்தக்கரை வந்து சேர்ந்தார்கள்.

அச்சமயத்தில் காற்றினுல் அலைகளதிவேகமா யெழுந்து அவற்றினின்றுந் திவலைகள் வேதாளத்தின்மீதுதெரிக்க உடனேசாப நிவர்த்தியாய் வேதாளரூபமாறிப் பழைய சொரூபத்தோடுஞ் சுத

ரிசனன் தம்பியாகிய சுகன்னனைக் கட்டிக் கொண்டான், இப்படி யிருவரு மொருவரை யொருவர் கட்டித்தழுவி யானந்தங்கொண்டு அப்புண்ணிய தீர்த்தத்திலே சங்கற்பவிதிப்படி நீராடித் திவ்ய சொரூபத்தை பெற்றுக்கொண்டவர்களாய் அத்தீர்த்தத்திற்குவேதாளவரத தீர்த்தமென்று விளங்கக்கடவதென்று பெயர்கொண்டு பின்பு இருவரும் விமானமேரித் தேவர்கள் மலர்மாரிதூவத்தேவதுந்துபிமுழங்க அப்சரஸ்திரிகள் நடிக்க காந்தர்வலோகம்போய்ச் சேர்ந்தார்கள், அன்றுமுதல் அத்தீர்த்தத்திற்கு வேதாள வரத தீர்த்தமென்று பெயர் விளங்கிக்கொண்டிருப்பதன்றியும், அதில் மூழ்கினவர்களுக்கு பூதப்பிரேத பைசாசகணங்களின் உபத்திரவங்களிருந்தபோதிலும் விலகுவதோடு மவர்கள்செய்தபாபங்களும் நிவர்த்தியாகும் அதின்மகிமை யளவிட்டுச் சொல்லலாகாதென்று சூதமகாமுனிவர்சொல்ல, அதைக்கேட்டநைமிசாரண்ணியமுனிவர்கள் சந்தோஷமடைந்து அம்முனிவரைநோக்கி சுவாமி? இன்னம் அச்சேதுவின் மகிமைகளைச் சொல்லவேண்டுமென்று பணிந்துவினவ முநிவரும் சொல்லத்தொடங்கினர்.

வேதாள வரதீர்த்தம்

முற்றிற்று.

---

உ

மூன்றுவது

## பாவநாசதீர்த்தம்.

---

கேளுங்கள் முநிவர்களே! இப்போது யாம்சொல்லிவந்த புண்ணியதீர்த்தங்களன்றியும் இன்னம் தீர்த்தங்களு மனேகமகிமைகளுங் கந்தமாதன பருவதத்திலே விளங்கிக்கொண்டிருக்கும் அக்கந்தமாதனபருவதம் நாமிப்போது சொல்லிவந்தவேதாளவரததீர்த்தத்திற்கு தட்சிணபாகமாகியுங் கைலாசபதியாகிய சாம்பசிவமூர்த்திக்கு இருப்பிடமாகியும் விசுவகர்மாவால் நிருமிக்கப்பட்ட வேதாரண்ய முதலிய சிவஸ்தலங்களிலும், விஷ்னுஸ்தலங்களிலும், சிரேஷ்டமாய்த் தென்கடல்சூழ்ந்ததாய் சகலதேவர்

களும் நவகோடிசித்தர்களும் சித்துபுருஷர்களும் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளும்கின்னரகிம்புருட கருடகாந்தருவ சித்தவித்தியாதரர்களும் அட்டவசுக்களும் ஒன்பது கோட்களும் வாசஞ்செய்து கொண்டிருக்கப்பட்டதாய் அநேகவளம்பொருந்தியிருக்கும் கந்தமாதன பருவதத்திலே சந்திரஜடாதரமூர்த்தியாகிய பரமேஸ்வரன் பார்வதிசமேதராய் மகாவிஷ்ணு முதலியவர்களுடனே விளங்கிக்கொண்டிருப்பார் அக்கந்தமாதன பருவதத்தைக் கண்ணுற்கண்ட புண்ணியர்களுக்கு நித்தியானந்த மோட்சசாம்பிராச்சியங் கிடைப்பதன்றியும் பரஸ் த்ரீகமனத்தால் வந்த பாதகங்களும் சிசுஹத்தி பிரமஹத்திகள்செய்த பாபங்களும் மாதாபிதா குருமுதலாகிய பெரியோர்களை நிந்தனைசெய்த பாதகங்களும் பரப்பிரம்மசொரூபமாய் விளங்கப்பட்ட கந்தமாதன பருவதத்தைத் தெரிசித்தாலும் அவ்வெல்லையை மிதித்தாலும் அதிலுண்டாகிய காற்றினது பரிசம்பட்டாலும் மகா புண்ணியசாலிகளாய் திவ்விய சொரூபங்களைப்பெற்று புண்ணியலோகங்களையடைவார்கள்-அக்கந்த மாதனத்திலே குடிகொண்டிருந்து வாழப்பட்ட நரசென்மங்களும் மிருகஜாதிகளும் பட்சிஜாதிகளுமாகிய யாவும் தேவதாசொரூபங்களைப்போலும், விருட்சங்களெல்லாங்கற்பகவிருட்சங்களைப்போலும் தீர்த்தங்களெல்லாம்புண்ணியதீர்த்தங்களாயும்அப்பருவதத்திலுள்ள மணல்களெல்லாஞ்சிவலிங்கசொரூபங்களாகவும்விளங்கிக்கொண்டிருக்கும், அக்கந்தமாதனபருவதத்திலே வசிக்குந்தேவர்களைத்தெரிசித்தவர்கள் சக்கரதீர்த்தத்திலும்விதிப்படி மூழ்கி பின்னர் அப்பருவதத்தின் எல்லையைக்கண்டவுடனே வணஙகிப் பூசித்து அடியேங்கள் கடைத்தேறும்பொருட்டுயாத்திரைசெய்துவருகிறவழியில் எங்களுடையகால்கள் உன்மீதிற்படுகிற குற்றத்தைப்பொறுத்து ரட்சிக்கவேண்டுமென்று துதித்துப் பின்புதங்களுடையகால் களிற்பாதுகையில்லாமல் கீழ்முகமாய்த் திரும்பி மெல்லநடந்து அக்கந்தமாதனத்திலே விளங்குகின்ற புண்ணியதீர்த்தங்களிலாடி இராமலிங்கத்தைத் தெரிசித்துவருபவர்கள் ஒருகடுகளவு பிண்டமாகிலும் அக்கந்தமாதன பருவதத்தில் தங்களுடைய பிதிர்க்களை நினைத்துத் தர்ப்பனஞ்செய்து தத்தம்பண்ணிணல் அவர்களும் ஒருகற்பகோடி காலம்வரையிலும் புண்ணியலோகத்திலே சுகானந்தத்தை அடைவார்கள். இவ்வாறு செய்து வருபவர்களுக்கு அதுமுதல் பிதுர்க்கள் இல்லாதிருப்பதோடும் அவர்கள் வமிசத்தில் ஒருகோடி தலைமுறை வரையிலும்

சேர்ந்தபேர்கள் என்ன சென்மமெடுத்தும் என்னபாபங்கள்செய்திருந்தபோதிலும் அவரவர்களுக்கு இயமதரிசனமும் இயமதண்டனையும் கிட்டாமல் விலகிப்போம்.

இவ்வித மகிமை வாய்ந்த கந்தமாதன பருவதமானது ஸ்ரீராமமூர்த்தியின் வாக்கியப்படியே தெய்வதச்சனானவன் அனுமார் முதலியவானரவீரர்களைக்கொண்டு சேதுபந்தனஞ் செய்கிறபோது தென்சமுத்திரக் கரையோரமாய்ச் சமுத்திரத்திலிருந்ததை ஸ்ரீராமமூர்த்திக்குத் தெரியப்படுத்தி அவருடைய ஆஞ்ஞையின்படி அதனைச் சேதுவின் மத்தியிலேவைத்து அணைகட்டினார்களாதலால் அச்சேதுவின் மத்தியில் விளங்குகின்ற கந்தமாதன மலையிலே அனேகங்கோடி தீர்த்தங்கள் விளங்குவதில் பாவநாசமென்றொரு தீர்த்தமிருக்கின்றது, அத்தீர்த்தத்தில் முன்னொருகாலையில் இமயமலைச்சாரலிலே பிர்மவாசிரமமென்னும் வனத்தில் கற்பகம் சண்பகமுதலிய விருட்சங்களும் பருவதங்களும் நெருங்கிய சோலைகளாகாயத்தை யளாவவும் வண்டுகள்கீதம்பாடவுஞ் சிங்காரத்தோடுங் கூடியிருக்கும் அவ்வனத்தில் ரிஷீஸ்வராள் தபோதனர்கள் பிரமசாரிகள் வானப்பிரஸ்தர், சந்நியாசிகள் முதலியோர் அடர்ந்து கூடியிருப்பவர்களிடத்தில் திடமதியென்னும் பெயரையுடையஒரு சூத்திரன் சேர்ந்து அவர்களால் ஓதப்பட்ட வேதசாஸ்திரங்களைக் கேட்டு அன்னவர்களைப் பணிந்து நமஸ்கரித்து ஏ பெரியோர்களே! தாங்கள் செய்கிற கிரியைகள் யாவும் யான் செய்யவேண்டுமென்று மிகவும் ஆசையிருப்பதால் என்னை உமது தொண்டனாக வடிமைப்படுத்தி எனக்கு வேதங்களை போதுவித்துநீங்கள் நடாத்திவரும் யாகாதி கிர்த்தியங்களைப்போல் யானு மநுட்டிக்கக் கருணைசெய்ய வேண்டுமென்று அவர்களை வேண்டுதல்செய்தான்.

அதற்கவர்கள் அச்சூத்திரனை நோக்கி வாராய் திடமதியேநீ சூத்திரனாகப் பிறந்து புலால்புசித்து அனேக பாவங்களைச்செய்திருப்பதால் உனக்கு யாகாதிகிர்த்தியங்கள் செய்கின்ற வேதமந்திரங்களை யுபதேசஞ் செய்யப்படாதாதலால் நீ மநுசாஸ்திரவிதியின்படி நடக்கவேண்டிய சரிதையை யநுட்டிக்காமல் வேதயுக்தமான காரியங்களைக் கேட்கிறது சரியன்று மேலும் நன்மார்க்கத்தில்நடந்து மேலான ஜென்மமெடுத்தால் இக்காரியங்கள்கைகூடுமென்று

அப்பெரியோர்கள் சொல்லினர்கல். அவ்வாய்மையைக் கேட்ட திடமதியானவன் விசாரமடைந்து நாம் ஆவலுடன்கேட்டகாரிய ங்கைகூடாமற் போய்விட்டதே யென்று நாணமுற்றுத் தலைகுனிந் து தனது கிருகத்திற் போய்ச்சேர்ந்து யோசனைசெய்து பேலோ ராற் சொல்லிய சரிதை மார்க்கங்களில்நடக்கவேண்டுமென்றுமன தைத் திடஞ்செய்துக்கொண்டு அதுமுதல் நந்தவனங்கள்வைத்து ம், தடாகங்கள் வெட்டியும், விரதங்களை யநுட்டித்தும் தவங்களை த்தொடுத்தும் தீர்த்தயாத்திரைகள் செய்தும் பெரியோர்களையுப சரித்தும் புண்ணிய காரியங்களுக்கு வேண்டிய திரவியங்களைக் கொடுத்தும் சித்துபுருஷர்களுக்கு கந்தமுதலாதிகளை யுதவியும் மார்க்கங்களில் சத்திரங்கள், சாவடிகள், மடங்கள் புதுக்கியும்தண் ணீர்ப்பந்தர்க ளமைத்து, வேதவிதியிற் கூறியமுப்பத்திரண்டறங் களையும் வழுவின்றி நடத்திவருவானாயினன் அக்காலத்தில் அம் மார்க்கத்தில் சதாகாலமும் வரத்துப் போக்காயுள்ள சுமதி யென் னும் பிரமசாரிக்கு வேண்டிய வுபசரணைகள் யாதுங்குறைவின்றி விசுவாசத்துடனே நடத்திவருகையில் அவருக் கிவன்மீது பிரிய முண்டாகி நேசித்து வருகையில் ஒருநாள் திடமதியென்பவன் சுமதியென்பவரெழுந்தருளியிருக்கு மாசிரமத்துக்குப்போய் அவ ரைக்கண்டு பணிந்து சுவாமி அடியேனுக்கு நெடுநாளாய் ஓர் கரு த்துண்டாயிருக்கின்றது.

அது யாதெனில் வேதவிதிப்படி யாகாதி கிர்த்தியங்கள்ஜெப தபவோமங்கள் முதலிய யாவு மடிமையே செய்யும்படி யெண்ண மிருப்பதால் அதற்குரிய வேதமந்திர மூலங்களைத் தமியே னுக்குக் கடாட்சிக்க வேண்டுமெனக் கேட்க அப்போது சுமதி யென்பவர் அவன்மீது வைத்திருக்கும் பிரியத்தினாலே பிரம்மகுலத்திற்குரிய மந்திரதந்திரபிரயோகங்களையெல்லாந் திடமாயவனுக்குப்போதிக் கஅவனும்உணர்ந்திருக்கையில் இச்செய்தியை இமயமலைசாரலிலெ ழுந்தருளி யிருக்கும் பெரியோர்கள் கேட்டறிந்து அச்சுமதியை யாவருந் தூஷிக்கத் தலைப்பட்டார்கள் அதுமுதல் அவருக்கு நா ளுக்குநாள் தேஜசு குறைந்து வியாகுலத்தோடும் மரணமடைந் தார் அவ்வாறு மரணமடைந்தவர் யமகிங்கிலியர்களது தண்டனை க்குட்பட்டு இரௌரவாதி நரகங்களிலே கற்பகோடி காலம்வரை யி லுழலுவானாயினன். அக்கொடிய பாவம் பின்பு தாவரங்களிற் சம்பந்தித்த புல்பூண்டு முதலிய பல பிறவிகளெடுத்துஅதினின்று

றும்நீங்கி மிருகசாதியிற் கழுதையாகவும்பன்றியாகவும் நாயாக வும்பிறந்து அதினின்று நீங்கி மானிடசாதியில் நீசனுகவுஞ் சூத் திரனுகவும்வைசியனுகவும் க்ஷத்திரியனுகவும் பிறந்து அநேக துன் பங்களையெல்லா மநுபவித்து தனது கர்மங்களைப் போக்கிப் பழை யபடியே பிரமகுலத்திற் பிறப்பானுயினன் அப்போது தனக்குஐந் துவயதிற்சௌள உபநயனங்கள் வித்யாப்பியாசங்கள் பண்ணிக் கொண்டு யாவுமுணர்ந்தவனுக விருக்கின்றநாளில் ஒருநாள் தர்ப் பைசமித்து வேண்டியிருந்து வனத்திற்குப்போய் சேகரஞ்செய்து கொண்டு வருகிறபோது அவனையோர் பிரமராக்ஷசப் பேய்பிடி க்க, அதனுலியாதுந்தெரியாமல் பிரமைகொண்டு கண்கள் சுழலமி ட்டு நாத்தடுமாறிப் பிதற்றலுண்டாய் நானுவித சேட்டைகளுண் டாகியழுது கூக்குரலிட்டுத் தாவிக்குதித்து நாளுக்குநாளதிகரித் து சிறுநீர்குடிக்கும்பெரும் பயித்தியங்கொண்டவனுய் அதிகதுன் பங்களையநுபவித்துக்கொண்டு வருகையில் அவனைப்பயந்த தந்தை யானவன்கண்டு விசனமடைந்து துக்கசாகரத்தில் மூழ்கி இந்தவி னையை யெவ்விதமாய் தீர்ப்போமெனக்கருதி அவனைக்கூட்டிக்கொ ண்டுயாத்திரவாசியாய் சிவஸ்தலங்களையும் விஷ்ணுஸ்தலக்களையுந் தரிசித்துந்தீராததாய் தென்றிசையிலே யோங்கும் பொதிகைம லைச் சார்பாய்வாராநின்றுன் அங்ஙனம் வருகிறபோது முன்னெரு கால் சமுத்திரத்தை உள்ளங்கையில் யேந்திக்குடித்த அகத்திய மாமுனிவர் அவ்வனத்தில்வரக்கண்டு இவ்விருவரும் அவரது பாதாரவிந்தங்களிலே வீழ்ந்துநமஸ்கரித்துசுவாமி அடியேனுக்கு நெடுநாளாய்ச் சந்தததியின்றி அநேக விரதங்களையநுட்டித்துப் பிறந்தஇப்பிள்ளைக்குளட்டுவயதுமுதல் பயித்தியங்கொண்டு தீரா மற்றுன்பத்தை யனுபவித்துக்கொண்டு வருகிறுன்.

தேவரீர் க்ருபைசெய்து இதுதீரும்படி கடாக்ஷிக்கவேண்டு மென்று துதித்துநிற்க வப்போது அகத்தியமுனிவர் கருணைகூர்ந் துஞானதிருஷ்டியாற் பார்த்து வாரும் பிராமணு இவனுடைய சரி த்திரங்களைப்பேசினுலும் மகா பாபம்வருமாதலாலும் இவனெடு த்த ஜென்மங்களுங்கணக்குவழக்கில்லை யாதலாலும் இவன்பாபங் கள் நாசமாகவேண்டுமாதலாலும் அதற்கொருவகை சொல்லுகி ரேம் அதாவது சேதுவிலோங்குங் கந்தமாதன பருவதத்தருகில் வேதாளவரத தீர்த்தத்திற்கு ஈசான்யதிசையில் புண்ணியதீர்த்த மொன்றுண்டு அப்புண்ணிய தீர்த்தத்தில் இவனைக்கொண்டுபோய்

ஸ்நானம்பண்ணுவித்தால் உடனே இவனுடைய பாபங்கள்விமோசனமாவதுடன்இப்பயித்தியமும் நீங்குமென்று சொல்லினர் அதுகேட்டபிராமணன் சந்தோஷமுற்று முநிவரைப்பணிந்து விடைபெற்றுக்கொண்டவனுய்ப் பிள்ளையைக் கூட்டிக்கொண்டு சேதுவைச்சேர்ந்து அவணேங்கும் கந்தமாதன பருவதச்சாரலிலுள்ள புண்ணிய தீர்த்தங்களைக்கண்டு வியப்புற்று சங்கற்ப விதியின்படி புத்திரனை மூழ்குவித்து தானும் நீராடினன் உடனே பானுவைக் கண்டபனிபோலும் அனலைக்கண்ட குளிர்போலும் அப்பிள்ளையினது பாபங்களெல்லாம் நீங்கிக் கிருதார்த்தனுய் சரியான மனத்தோடு தகப்பனைப்பார்த்துப்பணிந்து ஒ பிதாவ நாம் இங்குவந்ததற்குக்காரணம்யாதென்றுகேட்டான் அதற்குத் தந்தையானவன் மகாசந்தோஷத்தை யடைந்து, நடந்த சவிஸ்தாரங்களையெல்லாமவனுக்குரைத்து மூன்றுநாள்வரையி லங்கிருந்து தீர்த்தமாடிநான்காநாட்பிரயாணப்பட்டுத் தனதிருப்பிடம்வந்துசேர்ந்து அளவிறந்த செல்வத்தோடும் வாழ்ந்து பின்னர் ஞானசொரூபத்தை யடைந்தான்.

இது இங்ஙனமிருக்க இவனிடத்தில் வேதமந்திரங்களைக்கேட்டுணர்ந்த திடமதியென்னுஞ் சூத்திரன் அதுமுதல் வறுமைத்தசையையடைந்துஉயிர்விட்டவனுய் அநேககற்பகோடிகாலமளவும் இரவுரவாதி நரகவேதனைக் குள்ளாகிய நேககோடி ஜென்மங்களிற் பிறந்து அப்பால் கழுகுருவமாய்பிறந்து பிணமுதலிய மாம்சாதிகளைப் புசித்துக்கொண்டு திரிகிறபோது ஒருநாள்தானே சுயமாய்க் கந்தமாதனச்சார்பிலேவிளங்குகின்ற புண்ணியதீர்த்தத்தில்சிறகை விரித்து ஜலத்தை மேலெல்லா மிறைத்துக்கொண்டு அச்சலத்திற் றலையைத்தோய்த்துமூக்கினலே தண்ணீரைக்கோதி விளையாடுகிறபோது அதினுடைய பாபங்களெல்லாம் நாசமாய் முன்செய்திருந்தபுண்ணிய விசேடத்தினல் தேவசொரூபம்பெற்றுஆடையாபரணதிகளுடன் விளங்கினவனுய் தெய்வவிமானத்திலேறி தேவர்கள் மலர்மாரிசிந்த தேவதுந்துபிமுழங்கவும் தேவர்கள்ஆலவட்டம்பீலிக்குடைபிடித்துச்சாமரம்வீசிவரவும்அரம்பையூர்வசிதிலோத்தமை மேனகைமுதலிய அப்ஸரஸ்திரீகள்நடனஞ்செய்துவரும் படியாயும் தெய்வலோகம் போய் தேவபோகங்களை யநுபவித்துக்

கொண்டிருந்தான், இவ்வாறு, திடமதி சுமதியென்னுமிருவர்களி னுடைய அளவிறந்த ஜென்மங்கடோறுஞ்செய்த பாவங்களையெல் லாம் நாசப்படுத்திய புண்ணிய தீர்த்தத்திற்குப் பாவநாசமென்று அதுமுதற் பெயர் விளங்கிக்கொண்டிருக்கிறபடியால் அப்படிப்பட் புண்ணியதீர்த்த்த்திலே தகாதகாரியங்கள் செய்து அதனல் பாபி களானபேர்களும் மூழ்கினுல் உடனேயவர்கள் செய்தபாபங்கள் நாசமாய்ப் புண்ணியர்களாகி திவ்யசொரூபத்தைப் பெறுவார்கள்.

அத் தீர்த்தத்திற்குக் கீழ்ப்பாரிசத்தில் சீதா குண்ட தீர்த்த மென்று ஒருதடாக மிருக்கின்றது அத்தடாகத்தில் அமராவதிப் பட்டணத்துக் கிறைவனுகிய தேவேந்திரனது பிரமஹத்தி விமோ சனமாயிருக்கிறதென்றுசூதமகாமுனிவர்சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்ய வாசிகளாகிய முனிவர்கள் சந்தோஷ மடைந்து சுவாமி! தேவேந்திரனுக்குப் பிரமகத்தி சம்பவித்தவிதமும், சீதா குண்ட தீர்த்தத்தினுலே அவைவிலகிய பெருமையுந் தேவரீர் திரு வாய்மலர்ந்தருள வேண்டுமென்று கேட்கச் சூதமுனிவர் கருணை கூர்ந்து அவர்களுக்குச் சொல்லத்தொடங்கினுர்.

பாவநாசதீர்த்தம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்,

நான்காவது.

## சீதாகுண்டதீர்த்தம்.

---

நைமிசாரண்ய முனிவர்களே! கேளுங்கள் முன்னெருகாலத் திலேவைஜயந்தமென்னும் பட்டணத்திலே கபாலபரணனென்னு மோரிராட்சதன் பிரமதேவனைநோக்கித் தவஞ்செய்து அனேகவ ரங்களைப் பெற்றுக்கொண்டவனுய் குணபவீணனென்னு மந்திரியு

டனும் அநேகராட்சதப் படைகளுடனே அரசாண்டு வருகையில் திக்குவிஜயஞ் செய்யவேண்டுமெனக் கருதி மனவலிகொண்டு ரத கஜ துரகபதாதிகளுடனே யுத்தசந்நத்தனாய்ப் பிரயாணப்பட்டுப் போய் அமராவதிபட்டணத்தை முற்றுகையிட்டான்.

அதுகண்ட தேவராசனும் யுத்தகோலங்கொண்டு அனேக சேனைகளுடனே வந்து எதிர்த்து இருதிறப்படைகளுங்கலந்துயுத்தஞ்செய்கிறபோது, கபாலபரணனுடைய மந்திரியாகிய குணபவீணனென்னு மிராக்கதன் ஓர் தண்டத்தைக் கையிலேந்தி இந்திரன்படையிற் சண்டமாருதம்போற் பாய்ந்து கொக்கரித்துக்கதையைக் கரகரவெனச்சுழற்றி இரதங்களையும் யானை குதிரை சேனைகளையுஞ் சின்னபின்னமாய்ச் சிதைத்து ஓர்கணப்போதில் முப்பதக்ரோணி சேனைகளையுஞ் பெருங்காற்றி லகப்பட்ட பஞ்சுபோற் பறக்கவிடுத்துக் கியாவென்று சிங்கநாதஞ்செய்கையில் அப்படை வீரனாகிய வருணன் கண்டு மனம் வெதும்பி ரவுத்ராகாரனாய்த் தனது தேரைக்குணபவீணன்மீதுசெலுத்தி வளைத்துக்கொண்டு தனதுவில்லினிடமாக அனேகமாயிரம் எரிமுகக்கணைகளைச் சந்தித்தும் பிரயோகஞ்செய்து அவன்கையிலிருந்த தண்டத்தைப்பொடிப் பொடியாய்ச்செய்து ஓர் அர்த்தசந்திரபாணத்தால் அவன்சிரத்தைவெட்டித்தள்ளி அட்டகாசஞ்செய்து குலாலனது திகிரியைப்போலக் கரகரவென்று இராட்சதசேனைக்கடலுட்புகுந்துதிரிந்து நாசப்படுத்தும்போது அவன்தம்பியாகிய கோரதீவத்தி யென்பவன் கண்டு ஆலகாலம்போற் சீறியெழுந்து வருணனையெதிர்த்து வில்லைவளைத்து குணத்தொனிசெய்து சோனைமாரிபோல் அம்புகளைக் கணக்கில்லாமற் பிரயோகஞ் செய்து, வருணன் கைவில்லைக் கண்டித்து கண்ணைவிழித்துப் பார்க்க வொட்டாமற் சங்கஞ்சங்கமா யம்புகளைவாரி யிறைக்கையில் அதுகண்ட வருணன் கோபதீப்தனாயெரிந்து விழுந்து ஓர் வாளாயுதத்தைக் கையிலேந்தி தேரைவிட்டு பூமியிற்குதித்து கோரதீவத்தியின்பேரிற் சிங்கம்போற் பாய்ந்து, அவன் கரத்திலிருந்த வில்லை துணித்து அவன் தலையையும்வெட்டி அவனை யமபுரத்துக்கனுப்பி கொக்குத்திரளில் இராஜாளி புகுந்ததுபோல் அரக்கர் சேனையிற்பாய்ந்து நான்குதிக்கிலுஞ் சுழன்று இராட்சதர்களைக் கால்வேறு தலைவேறு வுடல்வேறாகக்கண்டித்து எங்கும் பிணக்காடாக்கிச்சிங்கநாதஞ்செய்கையில் அதுகண்ட அவன் தம்பிமார்களாகிய எரிபூணனும் கவுணனும் வந்தெதிர்த்து யுத்தஞ்செய்ய அவர்க ளிருவரை

யும் வாளுக்கிரையாக்கி ருத்திரமூர்த்தியைப்போற் கோபாவேசத்துடன் இராக்கதர்களை நாசப்படுத்தும்போது அதைக்கண்ட கபாலாபரணன் சகிக்கமாட்டாதவனுய் வடவாமுகாக்கினியைப்போலெழுந்து மேருவுக்குச் சமானமாகிய தனது இரதத்தை இந்திரன் சேனைகள்மீது செலுத்திக் கோடைகாலத் திடிபோல கர்ச்சித்து வில்லைவளைத்துக் குணத்தொனிசெய்து அவ்வில்லினிடமாகக் கணக்குமிதமில்லாமல் காளமுகியென்னு மேகமானதெழுந்து வருஷிப்பதுபோல எங்கும் பாணமயமாகச்செய்து தேவசேனைகளைச் சின்னபின்னப்படுத்தி மலைமலையாய்க்குவித்து நூறு அக்ரோணி சேனைகளையும் பாழ்படதூறிப் பாற்கடலைக்கடைந்த மந்தரமலைபோற் பண்ணவர்கள் சேனையாகிய கடலைப் பங்கப்படச் சிதைத்து தனது வெற்றிச்சங்கத்தை வாயினிடமாகவைத்து அண்டகடாகங்களு மதிரும்படியாய்ப் பம்பம்மென்று பூரித்தான்.

அப்போது அயிராணி கேள்வனுகிய இந்திரன் கண்டு அடங்காக் கோபங்கொண்டு அரக்கன்மேல் வெகுண்டு பளாபளாவென்று கூறு ஆலகாலம்போற் சீறித் தனது தேரைக் கபாலபரணன்மேற் றூண்டி வில்லைவளைத்து அவ்வில்லினிடமாக வச்சிராயுதத்திற்கு சமானமாகிய சிலீமுகக்கணைகளைக் கணக்குமிதமில்லாமற்றொடுத்து கரணபரியந்த மிழுத்துப் பிரயோகித்துக் கபாலபரணனுடையதேரைத் தூளாய்க் காற்றிற் பறக்கவிடுத்து கவசத்தைக் கிழித்து கைவில்லையு மொடித்துச் சாரதிதலையைவெட்டிச் சண்டனென்னு மியமனுக்குக் காணிக்கையாகவனுப்பி கியாவென்று சிங்கநாதஞ் செய்யும்போது கபாலபரணன்கண்களினின்றும்நெருப்புப்பொறிகள் குபீல் குபீ லென்று சிந்தும்படியாயுருட்டி விழித்து யுகாந்தகாலப் பேரொலிபோற் கர்ச்சித்து ஓர் சூலாயுதத்தையெடுத்துத் தேவேந்திரன் மார்பிற் பொருந்தும்படியாய் விட்டெறிந்தான் அதுகண்ட தேவராஜன் தனது வில்லினிடமாக ஒரு பிறைமுகக்கணையைச் சிந்தித்து அரக்கனெறிந்த சூலத்தைவெட்டித்தள்ளுகையில் உடனேயவன் வேறொரு தேரின் மீதேறித் தேவேந்திரனது சேனையிற்புகுந்து வில்லினிடமாக அம்புக்கூட்டங்களைத் தும்புதும்பாய் பறக்கச் செய்ததுமன்றி இந்திரனையுந் தேரோடுவாரிக் கீழேயடித்தான் அப்படி யடித்தும் அவனுடைய தேர்பரி முதலிய யாவுமொழிந்து மரணமூர்ச்சை யடைந்திருக்கையில் அதைக்கண்ட தேவர்கள் உள்ளம்பதைத்து அருகிற்சென்று வேண்டிய சயித்தியோபசாரங்களாற் றேற்றுகையில்

அவனும் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து அயிராவதமென்னும் யானையின்மீதேறிக் கபாலபரணனையெதிர்த்து வில்லைவளைத்துக் காளமுகியென்னு மேகத்தைப்போற் பாணங்களைச் சங்கோபசங் கமாய் தொடுத்துக் கபாலபரணனது கரசரணாதிகளை யசையாமற் செய்து கிரீடத்தையுடைத்து வில்லையுமுறித்துத் தேரைச் சக் கையாய்ப் பேர்த்தெறிந்து நூறுபாணத்தினாலே அவனுடையமா ர்பைச் சல்லடைக்கண்களாகத் துளைத்துப் பின்பு வச்சிராயுதத் தால் அரக்கனது சிரமற்று விழும்படிசெய்தான் அதனால் தேவே ந்திரனைப் பிரம்மகத்திதோஷம் பற்றியதென்று சூதமகாமுனிவர் சொல்ல, அதைக்கேட்ட முனிவர்கள் ஆச்கரியமடைந்து சூதரை நோக்கி சுவாமி இந்தக் கபாலபரணனென்கிற அரக்கனை வதஞ் செய்த இந்திரனைப் பிரமகத்தி பற்றியதென்பது எப்படி உலகின் கண் பிரம்மகுல சிரேஷ்டர்களை வதைப்பதே தொழிலாகப்பெற்ற இராக்கதனைக் கொன்றவனுக்குப் பிரமகத்தி யெப்படியுண்டாம்' மேலும் பசுவைக்கொன்றபுலியைக் கொல்லுபவனுக்குப் பசுவை க்கொன்றதோஷம் சம்பவித்த தென்பதுபோல் தேவரீர்சொல்லு வது புலப்படவில்லையேயென வினவ, அதற்குச் சூதமாமுனிவர் ஓ முனிவர்காள் இந்தரகசியம் நாம் சொல்லுகிறோம் கேளுங்கள் யாதெனில் விந்தாரண்யத்திலே திரிவக்கிரனென்னும் ஓ ரிராட்ச தன் சுசீலையென்னும் பெயர்பெற்று அதிரூபலாவண்யத்தோடுங் கூடிய ஓர் அரக்கியைக் கூடிக் குலாவி சுகித்திருக்கும் நாளையில் அவ்வரக்கி ஒருநாள் அவ்வாரண்யத்தில் தவஞ்செய்துக்கொண் டிருந்த கசியென்னு முனிவனது ஆசிரமத்துக்கு வந்தாள் பிரம னுக்கு சமானமாகிய அந்தமுனிவர் அவளைக்கண்டு மோகங்கொ ண்டு அடிபெண்ணே இங்குநீ தனித்துவந்த காரணமியாதென்று கேட்க, அதற்கவள் சுவாமி அடியாள் திரிவக்கிரனென்னுமிராட்ச தனுடையமனைவிஎன்பேர் சுசிலையென்று சொல்லுவார்கள் அடியா ளுக்குநெடுநாளாய்ப்புத்திரசந்தானமில்லாததுகண்டு எனது மணா ளனைக்கேட்கையில்அதற்குஎன்மணாளன் ஓபெண்பாவாய்இவ்வன த்தில்கசியென்னும்ஓர்முனிவரிருக்கிறார் அவரைப்போயடுத்தவரு டையவருள் பெருயைபாகிலுனக்கு புத்திரபாக்கிய முண்டாமென் றுசொல்ல,அப்படியேபேதையாகியநான் தேவரீரைவந்துதெரிசித்

தமையால் தேவரீர் திருவுளங்கணிந்து அடியாளைக் கூடிச்சுகித்து புத்திரபாக்கியமளிக்க வேண்டுமென்று பணிய அவ்வுரைகேட்ட முனிவர் சந்தோஷமடைந்து அவ்வரக்கியாகிய சுசீலைக்கு வேண்டிய உணவுகளைக்கொடுத் தாதரித்துத் தனது பன்னசாலையில் மூன்றுநாள்வரையி லவளைக்கூடிச்சுகித்து. அவள்மனம்போல வேண்டிய இன்பங்களைக் கொடுத்து நாளாநாளவ்வணிதையைநோக்கி ஒபெண்பாவாய் உனதுமனம்போல் இதுமுதல் உன்வயிற்றில்கருவுண்டாகி மகாபுஜபல பராக்ரமத்தோடுங் கபாலபரண னென்னொரு புத்திரன் பிறப்பான் அவன் பிரமனால் வேண்டிய வரங்களைப்பெற்று ராசரீகஞ் செய்துகொண்டு இந்திரனையன்றி மற்றதேவர்க ளியாவர்களாலுஞ் செயிக்கமுடியாதவனா யிருப்பானென்று சொல்லி அவளை விடைதந்தனுப்பி பின்பு பிரமகுல சிரேஷ்டராகிய சுசியென்னு மகாமுனிவர் ஸ்ரீகைலாயபதியாகி உமாமகேசனைத் தரிசிக்கவேண்டி வெள்ளியங்கிரிக் கெழுந்தருளினர்.

பின்புசுசீலையும் முனிவரருளியவண்ணங் கர்ப்பிணியாய்க்கபாலபரணனென்னும் பெயருடைய பிள்ளைப்பெற, அவனும் யாதொரு குறைவின்றி வளர்ந்து பிரமனைநோக்கித் தவஞ்செய்து அப்பிரமனால்வேண்டிய வரப்பிரசாதங்களைப் பெற்று இராசரீகஞ் செய்துக்கொண் டிருக்கும்போது திக்குவிஜயஞ் செய்யவேண்டிப் புறப்பட்டு தேவேந்திரனை யெதிர்த்து சமர்செய்து தேவர்களையெல்லாம் அதப்படுத்திப்பின்பு அவ்விந்திரனால் மரணமடைந்தான் இந்த அரக்கன் பிரமகுலோத்துங்கராகிய சுசியென்னும் மகாரிஷிக்குப் பிறந்தவனாதலால் இந்திரனைப்பிரஹத்தி பிடித்ததென்று சூதமுனிவர்சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்ய முனிவர்கள் சந்தேகநிவர்த்தியாய் சந்தோஷ்மடைந்தார்கள்.

பின்னும் சூதர் முனிவர்களைநோக்கி அப்பால்கேளுங்கள்நைமிசாரண்யமுனிவர்களே அமராவதிக்கிறைவனாகிய தேவேந்திரன் மிகவுந்துன்பமடைந்து பிரமனிடத்தில்முறையிட அம்முறைகேட்டபிரமன் வாரும் தேவராஜனே பூலோகத்திலோங்கும்பரதகண்டத்தில் ஸ்ரீராமமூர்த்தியாற் கட்டப்பட்டசேதுவிற் கந்தமாதனகிரிச்சார்பில் பாவநாசனத் தீர்த்தத்திற்கு கீழ்பாலாக ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியின் தேவியாகிய சீதாபிராட்டியாரால் உண்டாக்கப்பட்ட சீதாகுண்டமென்னும் பெயரையுடைய தீர்த்தத்திலே நீபோய் தீர்த்தமாடுவையாகில் உன்னைப்பற்றிய பிரமஹத்தி நீங்கு

மாதலால் நீ போய்வாவென்று சொல்ல, அதைக்கேட்ட தேவேந்திரன் பூலோகத்திற்குவந்து சேதுவைச்சார்ந்த கந்தமாதனத்தில் வழங்குஞ் சீதாகுண்டத்திற் சங்கற்பவிதியின்படி. தீர்த்தமாடி ஸ்ரீ கைலாசபதியாகிய உமாமகேசனைத் தெரிசித்துத் தன்னைப்பற்றிய பிரமஹத்தி தோஷத்தை நிவர்த்தி செய்துகொண்டு தனதுலோகம்போய்ச்சேர்ந்து சுகமாகவிருந்தான் அத்தன்மைவாய்ந்த சீதாகுண்டமானது உண்டாகியகாரண மியாதென்று வினவுவீராகில் முன்னர் சீதாபிராட்டியை இராவணன் கொண்டுபோய் அசோகவனத்தில் வைத்திருந்ததனாலே அத்தேவியினது கற்பை உலகத்திற் பிரசித்தப்படுத்தும் பொருட்டு இராவணனைப் புத்திரமித்திர பவுத்திராதிகளோடும் நாசப்படுத்தித் தேவியை மீட்டுகையில் அக்கினிகுண்ட மேற்படுத்தி அதிற் சீதாதேவியை முழுகச்செய்து பின் அதற்குச் சீதாகுண்டமென்று பெயர் கொடுத்திருப்பதால் அதில் மூழ்கினவர்கள் பாவங்களெல்லாம் விமோசனமாய்ப் புண்ணிய சென்மம்பெற்று அஷ்ட ஐசுவரியத்தோடும் விளங்கிக்கொண்டிருப்பார்கள் மேலுமச் சீதாகுண்டத்திற்குச் சமீபமாய் மங்கலதீர்த்தமென்றொரு தீர்த்தமிருக்கிறது அத் தீர்த்தத்தின் பெருமை இன்னதெனச்சொல்லி முடியாதென்று சூதமகாமுனிவர்சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யமுனிவர்கள் வியப்புற்று முனிவரைப்பணிந்து சுவாமி அடியேங்களுக்கு அத்தீர்த்தத்திற்குப் பெயர்வந்த காரணத்தை யின்னதெனத் தெரியப்படுத்த வேண்டுமென்று வினவ சூதமுனிவர் திருவுளங் கனிந்துசொல்லத் தொடங்குவாராயினர்,

சீதாகுண்டதீர்த்தம்.

முற்றிற்று.

## ஐந்தாவது

# மங்கல தீர்த்தம்.

---

கேளுங்கள் நைமிசாரண்யவாசிகளாகிய முனிவர்களே உலகின் கண் ஓங்கும் சோமசூரியாக்கினியென்னு முக்குலத்தரசருள் சந்திரகுல சிகாமணியாகியும் சயிந்தவமென்னும் பட்டணத்துக்கிறைவனுகியும் விளங்கும் மனோசவனென்னும் சக்கரவர்த்தியானவன் சுமித்திரை யென்னும் தேவியுடன் சந்திரகாந்தனென்னுங் குமாரனுடன் மந்திரி பிரதானிகள் முதலிய இரதகஜதுரகபதாதிகளோடும் மனுநீதி தவறுமல் குடிகளிடத்தில் ஆறிலொருகடமை பெற்றுத் திங்கண் மும்மாரிபெய்துவர அளவிறந்த கீர்த்தியோடு மிராச்சிய பரிபாலனஞ்செய்து வருவதன்றியும் தன்னுடைய நகரமானது சதாகாலமும் வேதியர்களா லோதப்பட்ட வேதபாராயண வோசையுடன் யாகாதி கிர்த்தியங்கள்நடத்தி தேவர்களுக் கவிற்பாகங்கொடுக்கையில் அவை பெறும்படியாய்வந்து நிறைந்து வாசஞ்செய்து கொண்டு தங்களுடைய பொன்னுலகவாழ்வை விரும்பாமல் மறந்திருக்குந் தேவர்களினேசையும் ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவன் வைகுண்டவாசியாகிய மகாவிஷ்ணு சிருட்டிகர்ததாவாகிய பிரமதேவன் இம்மூவரும் தத்தம் பத்தினிகளோடும் அவ்வவர்களது தொழிலையும் பதியையுமறந்து இப்பட்டணத்தி லெந்நேரமும் வாசஞ்செய்துகொண்டிருக்குமற்புதத்தோடுங் கூடியிருப்பதன்றியும் வேந்தன் கொடுக்கும் நித்திய சிரார்த்தங்களைப் பெறவேண்டி பிதுர்லோகத்தை மறந்துவந்து காத்துக்கொண்டிருக்கும் பிதுர்களுக்கும் முனிவார்முதலிய தபோதனர்களுக்கு மிருப்பிடமாகிய அனந்தமான பூங்காவனங்களுஞ் சோலைகளுஞ்சூழ்ந்து பானுவின் கிரணத்தையுமறைத்து இலங்காநின்ற பட்டணத்தை யரசாண்டுவருஞ் சக்கரவர்த்தியினது செங்கோற் பெருமையால் சந்திரசூரியர்களை இராகு கேதுவென்பவர்களுந் தீண்டுவதற்கு அச்சப்படும்படியாய் மனோசவனென்பவன் இராசரீகஞ் செய்துகொண்டு வருவாராயினன். அக்காலையில் தேவமிர்தத்துக் கொப்பாகிய தீம்பாலில் வேப்பந்தைலங்கலந்ததுபோல் ஊழ்வினையானது சக்கரவர்த்தியை யணுகிற்று அதனல் தனது

நல்லறிவழிந்து செங்கோன்முறைமை யாவும் பிறழ்ந்து கொடுங்கோலாகியும் அநீதியிற் பிரவேசித்தும்வேதசாஸ்திரபுராணங்களை மறந்தும் யாகாதிகிர்த்தியங்களை நீக்கியும் அறங்களை நிறுத்தியும் பிராமணருக்கு விடப்பட்டிருக்கும் காணிபூமிகளை யவர்களிடத்தில் துராக்ருதமாய்க் கவர்ந்து சிவாலய விஷ்ணுவாலயை முதலிய தேவாலயங்களுக்கு நடந்துவருந் திருவிழாக்களையும் நித்தியகட்டளை நிறுத்தியும் அவ்வாலயங்களிலுள்ள கடவுளர்க்குச் செய்தளித்திருக்கும் ஆடையாபரணங்களைக் கவர்ந்தும், குடிகளை துராக்கிருதமாய் துன்பப்படுத்தியும் யாவரும்நிந்திக்கும்படி யரசாண்டுவரத் தலைப்பட்டான். அக்காலத்தில் கோலபனென்னுமோரரசன் படையெடுத்து வந்தெதிர்த்துப் போர்செய்து மனுசவனது ராச்சியத்தை பிடித்துக்கொள்ள அதனால் மெத்தவுந் துன்பமடைந்து தான் தன் பத்தினி குமாரருடன் வெளிப்பட்டுப் பட்டணத்துக் கருகிலிருக்குமோர் சோலையில் எட்டுநாள் வரையில் அன்னபானதிகளின்றி யொளித்திருந்து ஒருவரும்போ யெட்டிப் பாராமையால் மிகுதுன்பத்தோடு மவனிருந்து பிரயாணப்பட்டு பரதேசிகளாய் ஓர் அந்த காரமானகாட்டிற்பிரவேசித்து வெய்யலின் தீட்சண்யந்தாளாதவர்களாய் விடாய்ப்பட்டு சோபத்தோடும் பிள்ளையானவன் தந்தையை நோக்கி ஓபாபசிநோயானது என்னை வருந்திக்கொல்லுகின்றதே என்செய்வேன் எப்படிச் சகிப்பேனென்று சொல்ல அவ்வுரைகேட்ட வேந்தன் திடுக்கிட்டு மனங்கலங்கிப் பலவாறுகச் சிந்தித்து இக்குறையையாரிடத்திற் சொல்லி யாறுவோமென ஏக்கங்கொண்டு தனது தேவியாகிய சுமத்திரையைப் பார்த்து ஓபெண்பாவாய் நமது குமாரனுகிய சந்திரகாந்தனது பசியை யெப்படி தணிப்பா எங்கேபோ யிரப்போம் யாம்செய்த வினையாதோ பிரமன் நமக்கு இப்படியாய் விதித்துவிட்டான் அந்தோ ஸ்ரீகைலாசபதியாகியபரமசிவனைப்பணியாமலும் பக்திசெய்யாமலும் மறையவர்களுக்கீந்த மண் பொன் முதலிய நிதிகளை பறித்துக்கொண்டதனு லன்றோ பெருந்துன்பத்துக் காளாகினேம் இஃதல்லாமலும் பசித்தோர் முகத்தைப் பார்த்து அன்னங் கொடுக்கா திருந்தேனே உருத்திராட்சமகாலிகா பரணத்தோடுங்கூடிச் சிவமாய் விளங்குஞ் சிவனடியார்களை சிந்தியாமல் இருந்தேனே சிறைச்சோற்றை யிடவொட்டாமற் றடுத்தேனே பரதேசிகளுக் கிடங்கொடாமல் துரத்தினேனே சிறு பிள்ளைகளினது உணவை யருந்தவொட்டாமற்றடுத்தே

னே கோயில்குளம் நந்தவனம் முதலியவைகளைப்பாழ்படுத்தினே
னே யாதோ அலைகின்றேன், என்செய்வேன் தெய்வமே தெய்வ
மேயென்று வேந்தனவன் மூர்ச்சித்து பூமியிற்சாய்ந்து பிரேத
ம்போலாயினன் இங்ஙனமிருந்த மணாளனைக்கண்ட சுமித்திரை
யானவள் திடுக்கிட்டு மெத்தக் கிலேசத்தோடு பூமிமேற் சாய்ந்த
தன்மணாளனது மேனியிற் புழுதியடைந்திருப்பதைக்கண்டுமிக
வும் வருத்தங்கொண்டு தங்களுக்குவந்து சம்பவித்த வினைப்பகுதி
யைவிண்டு என் பிராணநாயகனாகிய மகா மண்டலேசுவரா சந்தன
களபகஸ்தூரிபுனுகு ஜவ்வாதணிந்து மேருவுக்குச் சமமாய்பிரகா
சியா நின்ற நினது தோளினும் மார்பிலும்புழுதிபடர்ந்திருப்பதை
யான் காணும் காலம் நேரிட்டதேயென்று உள்ளம் பதைத்துப்
பண்டுயான்செய்த வினையோ முண்டகனாகிய பிரமன்தான் இவ்
வாறு விதித்தானேயென் றேங்கிப் பாதவித்து அரசே தேவரீர்
என்னைவிட்டுப் பிரிந்துபோகவா நினைக்கின்றீர் அந்தோ தாங்கள்
அடியாளைவிட்டுப் பிரிந்தால் இமைப்போதேனு முயிர்வைத்திருப்
பேனோ வைத்திருக்கமாட்டேன் இதோ யானுங்கூட வருவேனெ
ன்று புலம்புவதைக்கேட்ட புத்திரனானவன் தனது தந்தை மூர்ச்
சித்திருப்பதைக்கண்டு மிகவும் வருத்தங்கொண்டு ஆ என்தந்தை
யே மிகுபந்தமோடும் பெற்றுவளர்த்துப் பாராட்டிய வென்னைப்
பாதவிக்க விடுத்துப்போவ தழகோ ஐயா நான் பசிப்பிணியால்
மெலிந்து வாடுகின்றேனே யென்றுஉள்ளம்பதைத்துச் சோர்ந்தி
ரென்செய்வேன் சிறுவனாகியயான் இப்புவியினின்று மெவ்வாருய்
வேன் தாதையே தாதையேயென்று புலம்பிக்கொண் டிருக்கிறான்
அப்போது அம்மார்க்கத்தில் சந்திர சடாமூர்த்தியாகிய சிவபெரு
மானைப்போன்ற பராசரமகாமுநியென்பவர் விபூதிருத்ராட்சமாலி
காபரணராய் தண்டுகமண்டலத்துடனே அத்தடத்தில் வருபவ
ரிவர்களைக்கண்டு க்ருபாநோக்கத்தோடும்இவ்வனத்தில் ஆதரவின்
றிப் பாதவித்துக்கொண்டிருக்கும் நீங்கள் யாவரென்று கேட்க,
அம்முநிவரது கிருபாநோக்கம் பட்டதும் சுமித்திரையும் அவள்
சுதனாகிய சந்திரகாந்தனுஞ் சோபந்தீர்ந்து எழுந்திருந்து பராசர
முனிவரது பாதபத்மங்களிலே விழுந்து நமஸ்கரித்துச் சொல்லு
வார்கள் சுவாமி நாங்களிருப்பது சயிந்தமாநகரம் அந்தநகரத்தை
யரசாளு மனோசவனென்னும்பெயர்வாய்ந்து இவன் மூர்ச்சித்திரு
ப்பவர் எனது நாயகர் இச்சிறுவன் என்குமாரன் இவனுக்குச்சந்
திரகாந்தனென்று பெயர், எளியாளைச் சுமித்திரையென்று சொ

ல்லுவார்கள்நாங்கள் இராச்சிய பரிபாலனஞ்செய்து கொண்டிருக்கையில் எங்களது ஊழ்வினையால் கோலபனென்னும் வேந்தன் படையெடுத்துவந்து அமர்விளைத்து எங்களைத் தோற்பித்து இராச்சியத்தைக் கைப்பற்றிக்கொண்டான் பின் யாங்கள் பராரிகளைப் போல நிர்ப்பாக்கியத்தோடும்அன்னபானுதிகளுக்கு மேதுவில்லாமல் இவ்வனத்தில் வந்துகொண் டிருக்கும்போது குமாரன் பசிப்பிணியால் வருந்துவதைக்கேட்ட வரசர்சகியாதவராய்த் தாமும்பசியால்மெலிந்து மூர்ச்சித்து நிலத்தின்மேற் சாய்ந்தனர், யாங்களிருவரும் எவ்வகையுமில்லாமற் பரதவிக்கின்றோம் என்செய்வோம் சுவாமி என்று இரக்கத்தோடுங் கூறிய சுபத்திரையின்மொழியைக்கேட்டபராசரமுனிவர் வாராய் சுமத்திரையே இவ்வகைத் துன்பங்களெல்லாஞ் சம்பவித்ததற்குக் காரணமியாதெனின் உனதுநாயகன் அரசுரிமையில் மநுநீதிக்கு விரோதமாய் நடந்து வாக்கினுலுஞ் சொல்லப்படாத கொடிய கர்மானுபவங்களுக் குடன்பட்டமையால் அனுபவிக்கவேண்டி வந்தனவாதலால் நீங்கள் வீணேதுன்பப்படுவதில் என்ன பிரயோசனமுண்டாம்இப்போ உனதுநாயகனை யெழுப்பித்தருகிறோம் வியசனமுறா திருவென்று கூறித்தமது கமண்டலத்திலுள்ள ஜலத்தை மனோசவன் மீதிற்றெளித்தார் உடனே மனோசவன் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து எதிரில்சாம்பவ மூர்த்தியைப்போற் சேவைதந்து நிற்கும் பராசரரை பக்திவிநயத்தோடும்பணிந்து சுவாமி அடியேனது ஜென்மசாபல்யமாச்சுதென்று பலவாறுப் துதித்துத்தனக்கு நடந்தகாரியங்களையெல்லா மாதியோடந்தமாய்ச்சொல்லி இத்துன்பம் நீங்கும்படியாய் தேவரீர் கடாக்ஷித்தருள வேண்டுமென்று பணிந்துநிற்கும் வேந்தனைநோக்கிப் பராசரமுநிவர் கூறுவாராயினர்.

கேளும் மனோசவனென்னும் வேந்தனே இனியுனக்கு ஸ்ரீ கைலாசபதியாகிய சந்திரஜடாதர மூர்த்தியினருளால் உனதுதுன்பமியாவும்நீங்கி உன்சத்துருவாகிய கோலபனென்பவனையுஞ்செயித்துப்பழையபடி இராச்சியத்தைப் பெறவேண்டுமாயின், தென்றிசையில் ஸ்ரீராமமூர்த்தியாற் கட்டப்பட்ட சேதுவில் வழங்குங்கந்தமாதனபருவதச்சார்பில் சீதாகுண்டத்துக்குச்சமீபமாய்ஒருதிவ்யதீர்த்தமிருக்கின்றதாகையால் அத்தீர்த்தத்திலே நீஉன்னுடைய தேவியுங் குமாரனுமாய்ப்போய் தீர்த்தமாடிச்சங்கற்பவிதியின்படி சிரார்த்தமுதலிய யாவும் வழுவின்றிச்செய்து வருவாயேல்உனது

துன்பங்களெல்லாம் நீங்குமாதலால் யாமும் வருகின்றோம் வாருங்களென்றுசொல்ல, மனோசவன் மிகவுஞ் சந்தோஷித்து அவ்வாறே முனிவரோடும் பிரயாணப்பட்டுக் காடு மலை வனம் வனாந்தரங்களெல்லாங்கடந்து அனேக திவ்யக்ஷேத்திரங்களையுந் தரிசித்து சேதுவிலோங்கும் கந்தமாதனபருவதச் சார்பிலிருக்கு மங்கல தீர்த்தக்கரையில்வந்துசேர்ந்து அத்தீர்த்தத்தில் பராசர மகாமுனியின் சொற்படி மூன்றுமாதம்வரையில் தீர்த்தமாடி சிரார்த்தங்கள்செய்து ஸ்ரீராமமந்திரத்தை யிடைவிடாமற் செபித்துவாசஞ்செய்து கொண்டிருக்கும்போது அவ்வேந்தனது கிரீட மகர குண்டலங்களும் உடைவாளும், வில் வேல் முதலிய படைகளும் பட்டத்துக்குதிரையும் இரதகஜ துரகபதாதிகளும் மந்திரி முதலியவர்களோடு சமஸ்தநிதிகளும் ஒன்றொன்றாய் மங்கலதீர்த்தத்திற்றோன்றிக்கரையேறுகையி லதைக்கண்டவேந்தனும் அவனது பெண்டுபிள்ளைகளுஞ் சந்தோஷங்கொண்ட சிவர்களாய் அருகிலெழுந்தருளிய பராசரமகாமுனிவரது பாதபத்மங்களைவணங்கி எங்களுக்கென்ன வுத்தரவென்று கேழ்க்க பராசரும் ஆனந்தகடலுட்டோய்ந்து அம்மங்கல தீர்த்தத்தில் வேந்தனுக்கபிஷேகஞ்செய்து தனது தபமகிமையால் தெய்வநாயகன் முதலிய சமஸ்த தேவர்களையும் வருவித்து அன்னவர்களாசிகூறி ஜெயாவிஜயீபவாவென்றோதித் துந்துபிமுழங்கி மலர்மாரிதூவி அட்சதை யிறைக்கையில் அரசனுக்கு முடிசூட்டி இந்திராதி தேவர்களிடத்தில் அநேகவரங்களும் ஆயுதவகைகளும் வாங்கி யளித்து தானும் ஆசீர்வதித்துத் தன்னுடைய நகரத்துக்குச் செல்லும்படி விடைகொடுத்தனுப்பினர்.

அதுபோலவே மனோசவன் தனது தேவியோடுங்குமாரனோடும் பராசரமுனியைப்பணிந்து சதுரங்கதளத்துடனே பிரயாணப்பட்டு காடு மலை வனம் வனாந்தரங் கானாறுமுதலியவைகளும் பதிகளுங்கடந்து தமது பட்டணம்வந்துசேர்ந்து கோலபனென்னும் வேந்தனைஜெயித்துப் பழையபடி இராச்சிய பரிபாலனஞ் செய்து கொண்டிருந்தார்கள். இவர்க ளிவ்வாறிருக்கையில், பராசரமகாமுனிவர் அம்மங்கல தீர்த்தக்கரையில் நெடுநாள்வரையில் தவஞ்செய்துகொண்டிருந்து அப்பால் தெய்வலோகத்தை நாடிச்சென்றார் பின்னர் மனோசவனென்னும் வேந்தன் தனது தேவியோடும் ஆயிரம்வருடம்வரையில் ஆளுகையிலிருந்து அப்பால்தனது குமாரனாகிய சந்திரகாந்தனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்துஇராச்

களைப் பெற்றிருப்பார்கள் இதல்லாமலும் இச்சேதுவுக்கு சமான மான தீர்த்தம் எங்குங் கிடையாதாதலால் அவ்விடத்திற்போல வேறோரிடங்களிலும் ஆகமாட்டாது மேலும் உலகின்கண் பிறந்த ஜீவர்கள் ஆயிரஞ்சென்மம்வரையி லெடுத்து சேதுவில் ஸ்நானஞ் செய்துவந்த பலனெல்லாம் ஒரு அர்த்தோதய புண்ணியகாலத்தில் ஸ்நானஞ்செய்யப்பட்ட புண்ணியர்களுக்கு ஓர் இமைப்போதிற் கிடைக்குமென்று வேதாகமங்களாலும் பெரியோர்களாலுஞ் சொல்லப்பட்டிருக்கிறதென்று சூதமாமுநிவர் சொல்ல அதைக்கேட்ட நைமிசாரண்யர்கள் சுவாமி அறுபதினாயிரம் வருடம் வரையிற் கங்கை பிரயாகை என்னும் புண்யநதிகளிலே தீர்த்தமாடிய பலனைப் போல் சேது தநுக்கோடியிலே எத்தனை வருடத்திற் பெறலா மென்று கேட்க அப்போது சூதமகாமுனிவர் சொல்லுவார் ஓ முனிவர்களே அநேகம் புண்ணிய பலனைக் கொடுக்கப்பட்ட அர்த்தோதய மகோதயத்திலே ஸ்ரீராமதநுக்கோடியிலே ஓர்விசை ஸ்நானம் பண்ணிய பேர்கள் அடைவார்களென்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுவார்.

யாதெனில் அந்த அர்த்தோதய மகோதய வேளையிலே பிரயாகை கங்கை முதலிய நதிகளிலே ஆயிரந்தடவை ஸ்நானம் பண்ணின பலன் ஸ்ரீராம தநுக்கோடியிலே அக்காலத்தில் ஒரு விசை ஸ்நானம்பண்ணிய பேர்களுக்கு கிடைப்பதோடும் சொர்க்கமத்ய பாதாளமென்று மூன்றுலோகத்தினு முள்ள சகல தீர்த்தங்களிலும் ஆடிய பலன் எவ்வளவோ அவ்வளவு பலனும் ஸ்ரீராமமூர்த்தியால் உண்டாக்கப்பட்ட தனுகோடியிலே அர்த்தோதய மகோதயக் காலத்தில் ஸ்நானஞ்செய்த பேர்களுக்கு சித்தமாய் கிடைக்கும் இஃதன்றியும் பூலோகத்தில் செய்நன்றி மறந்த பேர்களுக்கு ஒருகாலமும் நல்லகெதி கிடைக்கமாட்டாமல், இரவுரவாதி நரகமே சித்தமாய்க் கிடைக்குமென்று வேதாகமங்களிற் சொல்லப் பட்டிருந்தாலும் அப்படிக்கொத்த பாவிகளும் பிரம விசாரணை செய்யாத அஞ்ஞானிகளும், பஞ்சமா பாதகங்கள் செய்தபேர்களும் சேது தனுக்கோடியிலே அர்த்தோதய புண்ணிய காலத்தில் ஓர்விசை ஸ்நாணம்பண்ணி விடுவார்களாயின் அவர்களுடைய பாபங்களெல்லாம் அதன் பரிசுத்தராவார்கள் இதல்லாமலும் அர்த்தோதய புண்யகாலத்தில்சேதுவில் ஸ்நானஞ் செய்யாமல், காமாதிகளால் யாரொருவர் கெர்வப்படுகின்றார்களோ அவர்கள் கண்கெ

ட்ட பாவிகளாய்த் துக்க சாகரத்தினின்றும் கறையேற மாட்டா தவர்களாய்க் குடும்பமென்னுஞ் சேற்றிலுழந்தி இரவுரவாதி நரகத்தை யடைவார்கள் காமாதிகளை விடுத்து ஸ்நானஞ்செய்த பேர்கள் சூரியமண்டலத்தைச் சார்ந்து பிரம்மானந்தத்தை யடைந்திருப்பார்கள்.

இதல்லாமலும் சிறப்புற்றோங்கிய சேதுவிலேகிரமப்படி ஸ்நானஞ் செய்கிறவர்களெல்லாம் ஸ்ரீராமநாதன் இராமச்சந்திரன் சீதாதேவி அநுமான் சாம்புவந்தன் நளன் தேவேந்திரன் முதலிய தேவர்கள் சித்த புருஷாள் பிதுர்தேவதைகளை யெல்லாஞ் சிந்தித்து அர்க்கியங் கொடுத்து சூரியசந்திரன் விதிபாத முதலான தேவதைகளையும் தோத்திரஞ் செய்து மகிழ்வுறச்செய்து அப்பால் அவரவர்களுடைய சக்திக்குத் தக்கபடியாய் சற்பாத்திரராகிய பிராம்மணருக்கு ஆடாயாபரண வலங்கிருதஞ் செய்து தங்கம், பொன், வெள்ளி, தாம்பரம், வெண்கலம் இவைகளினற் றம்பாளஞ் செய்து அவற்றிற் பால் சர்க்கரை நெய் கனிவர்க்கங்கள் ஏதேனும் நிரைத்து அப்பாத்திரத்தைப் பிராமணருக்கு முன்னம் உபசாரணை செய்து தட்சிண தாம்பூலங்களோடும் கொடுக்க வேண்டும். அவ்வாறு நடத்துவதற்கு அசக்தராயின் மரத்தினற்செய்ததாம்பாளத்தில்மேற் கூறியவைகளை நிறைத்து அடியேனு லியன்றவைவை ஒப்புக்கொள்ள வேண்டு மென்று வுபசரணை செய்து சந்தோஷப்படுத்துவதனேடு பூணுங் கொடுத்துப் பின்னர் சகல உயிர்களுக்கு ஆதாரமாக விருக்கின்றதாயும் புனிதமாயுமோங்கும் பாற்பசுவும் கன்றும் தானஞ் செய்து ஜெகன்னுத சொரூபமாய் விளங்கும் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியே நினது ஜென்ம நட்சத்திரமாகிய திருவோணத்திலே அடியேன் சக்திக்குத் தக்கபடி பிராமணருக் குதவியதை நீருந்தபவு செய்து அங்கீகரித்திரட்சிக்க வேண்டு மென்று வைகுண்டவாசனுகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவைத் தோத்திரஞ் செய்து பின்பு நக்ஷத்திரங்களுக்கெல்லா முதற்காரணமாகிய வஸ்துவே, ஆடகலோகத்தமரர்களுக்கமுதமீந்த தெய்வமே உரோகிணி தேவியினது மனதுக்கிசை மணியே, உலகின்கண் ஒங்கும் சகல கலைகளுக்கும் பதியாய் நீக்கமறவிளங்கும்பொருளே அடியேனை யாட்கொள்ள வேண்டுமென்று வணங்கிய பின்னர், சந்திரனை நோக்கித் தமியேனது பாபமாகிய இருட்கூட்டத்தைப் பறக்கத்துரத்துஞ் சுடரே சுயஞ்சோதியே சொல்லற்கரிய ஞானப்பிரகாசமே துன்பக் கடலுட்டோய்ந் துழலும்யான் தேவரீ

ருடைய சரோருகம் போன்ற துணைத்தாட்களின் மீது என்றைக்கும் அகலாத அன்பைப் பொருந்தும்படியாய் அடியேனுக்குக் கிருபை செய்ய வேண்டுமெனத் துதித்து அதன்பின் சூரியனை நோக்கித் தோத்திரஞ் செய்து, பிறகு அன்னவர் புதல்வனாகிய விதி பாதயோகனை நோக்கி ஓ தெய்வமே எளியேன் சக்தி மாத்திரமீந்த தானமானது ஓண்ணட்சமா யிருக்கும்படியாய் கிருபைசெய்ய வேண்டு பென்று விதி பாத யோகத்தை வணங்கித் தேவப்பிராமணனையு மிவ்வாறே வணங்கி அப்பால் இரண்யசிரார்த்த முதலிய சிரார்த்த மனைத்தும் நடப்பித்து லோபமில்லாமல் தான தருமங்களைச் செய்து அதன்பின் பிராம்மணனுக்கு குடை பாதரட்சை முதலியவைகளைப் பூசித்துக் கொடுத்து அனுப்ப வேண்டும் விதி போல் இவ்வாறு அந்த இராமசேதுவின் தனுக்கோடியிலே அர்த்தோதய புண்ணியகாலத்தில் இப்படிச் செய்கிறபேர்களும் மாமக புண்ணியகாலத்திற் செய்கிறபேர்களுக்கும் உலகத்தின் கண் யாத்திரை செய்கிற பேர்களுக்கும் யாகாதி கிருத்தியங்களுந் தானதருமங்களி யாவுந் தேடவேண்டிய அவசியமில்லை அவர்களுக்குச் சகல பலன்களுங் கைகூடும்.

அன்னவர்கள் இந்தச் சேது தநுக்கோடியை யல்லாமல் மற்றவேறு தலங்களிலே யிருப்பினும் மேற்கூறிய வண்ணமே நடத்த வேண்டும் கேளுங்கள் மகாரிஷிகளே இதல்லாமலும் அந்த கந்தமாதனச் சார்பின் தென்றிசைச் சமுத்திரத்திலே ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியாற் உண்டாக்கி யிருக்கப்பட்ட சேதுவை மேலவர்களாலோதும் ஞானசிலர்களுஞ் அந்த ஞானத்துக்குரிய நிஷ்டை காலங்களிலே சேதுவைச் சிந்தித்தால் சகல அஞ்ஞானங்களும் பாவங்களும் நீங்கிக் கோடி சூரியப் பிரகாசமாய் பிரம்மானந்தத்தைப் பெறுவதோடும் இச்சேதுவிலே அரைக்ஷணமாவது வாசம் பண்ணுவார்களாயின் அவர்கள் சமீபத்திலே யமபடாளு மணுகாமல் விலகுவதோடும் ஸ்ரீராமநாதன் முதலிய தேவர்களுக்குச் செய்த குற்றமனைத்தும் அகன்றும்போம் கேளுங்கள் முனிவர்களே இதல்லாமலும் உலகின்கண் சிறப்போங்கிய ஸ்ரீசைலம், குருக்ஷேத்திரம், சித்திரகூடம், திருக்குடந்தை, தண்டகை, வதரிகாசிரமம் சுவேதபருவதம், காஞ்சீபுரம் அனந்த சயனம் திருக்கோட்டியூர், சேடாத்திரி, வடமதுரை, பத்மநாபம், புருஷோத்தமம், நைமிசாரண்ணியம் இவை முதலிய விஷ்ணு ஸ்தலங்களிலே வாசம் பண்ணிக் கொண்டிருக்கும்போது அதிலே உண்டா

கிய தீர்த்தங்களிலே ஸ்நானஞ்செய்து அளவிறந்ததான தருமங்களை செய்தாலும் மோட்ச சாம்பிராஜ்யத்தைப் பெறமாட்டார்கள். இச் சேதுவில் ஒருநாளேனும் செய்வார்களாகில் அவர்களுக்கு மோட்ச சாம்பிராஜ்யமுங் நன்மையுங் கிடைக்குமென்று சத்தியமாகச் சொல்வோம்.

இதன்றியும் ஸ்ரீராமதனுக்கோடியிலே ஸ்நானம்பண்ணியபேர்களுக்குச் சகலதுன்பங்களும் சகலபாபங்களும் நீங்கும் அவ்வாறு செய்யாமல் மற்ற எத்தீர்த்தங்களிற் செய்தபோதிலும் அவர்களுடைய பாபங்கள் நாசப்படாதென்று வேதங்களெல்லாம் சத்தியமாகவே சொல்லும், இவையல்லாமலும் பஞ்சாட்சரம் அஷ்டாச்சரங்களை செபித்தாலும் அல்லது அவைகளை ஜெபியாமல் மறந்துவிட்டபாபங்களும் சிவபூசை, அரிபூசை, குருபூசை, செய்யாத பாபங்களும் விபூதி உருத்திராட்சங் தரியாத பேர்களுடைய பாபங்களும் ஸ்ரீகைலாசபதியாகிய பரமசிவத்தையும் வைகுண்டநாதனாகிய மகாவிஷ்ணுவையும் துதியாத பாபங்களும் இந்தசேதுவிலே ஸ்நானம் பண்ணினவுடனே நசித்துப்போமெனவே சாஸ்திர பிரமாணம் பின்னும் தனுர்மாதத்தில் உதயகாலத்திலே தேவதைகளுக்கு அபிஷேக முதலியவை நடத்தி நைவேதனமும்செய்யாத பாபங்களும் சாளக்கிராமம் சிவலிங்கம் இவைகளைப் பூசியாதபேர்களுடைய பாவங்களும், அரிஹர நாமஸ்மரணை செய்யாதபேர்களுடைய பாபங்களும் காயத்ரி ஜெபங்களை மறந்துவிட்ட பாபங்களும் உச்சிநேரத்திற்பசித்துவந்த பேர்களுக்கு அன்னங்கொடாது உண்டபாபங்களும் ஔபாசனம் அக்கினிஹோத்திரம் வயிஸ்வதேவம் பிரமகாயத்ரி முதலானவைகளைத் தவறிவிட்ட பாபங்களும் மேற்கூறியவைகளை அகாலத்தில் நடத்திவைத்த பாபங்களும், கன்னிமாதத்திலே மாளயஞ் செய்யாதபாபங்களும் சயித்திரமாதப் பவுரணைகாலங்களிற் சித்திரகுத்தருக்குப் பிரீதியாய் வேதவாயினர்களுக்கு அன்னம் பால் பழம் சர்க்கரை நீர்மோர் இளநீர் வடை பருப்பு, கந்தகஸ்தூரி, குடை, பாதுகைதாம்பூல முதலானவைகளை நல்காத பாபங்களும் பிறவிச் சாகரத்தின்கண்ணுழ்ந்து முத்தியாங் கரையைக் காணுதுழலும் பாபமும் இச்சேதுவிலே ஸ்நானம் பண்ணினவுடனே அக்கினியிற்சொரிந்த நெய்போல்சுவறிப் புண்ணியபுருஷராய்க் குடும்பமென்னுங் துன்பசாகரத்தைக் கழித்து மோட்ச

சாம்பிராஜ்யத்தை யடைவார்களென்று சூதமாமுனிவரானநான் முக்காலும் சத்தியமாய் சொல்லுவோம்.

இதன்றியும் இந்த்ரநீலப் பருவதம்போல்விளங்குந் தென்றிசைக்கடவுளாகிய இயமனை மார்க்கண்டேயருக்காக உதைத்த பாதாரவிந்தத்தையுடைய சாம்பசிவமூர்த்தி முதலிய தேவர்களுஞ் சூழ்ந்து சதாகாலமும் வாசஞ்செய்துகொண்டிருக்கப்பட்ட இந்தச்சேது தனுக்கோடியை யடைந்தபேர்கள், எக்காலத்திலும் நித்தியானந்த சொரூப சாக்ஷாத்காரராய் வாழக்கடவார்கள். இதன்றியும், இத்தன்மை பொருந்திய மகிமைபேரடுங்கூடி விளங்கப்பட்ட இராமேச்சுரத்திற் பிறந்திருக்கப்பட்ட புற்பூடுகளும், புழுப்பூச்சிகளும், ஊர்வனமுதலிய ஜந்துக்களுக்கும் பறவைச்சாதி முதலியவற்றோடு கிளிக்கூட்டங்களும் மரங்களுமநேக புண்ணியங்களைப்பெற்று உய்வார்களென வேதசாஸ்திரங்களிற் சொல்லப்படுவதாலும் இத்தலத்திற் பிறக்கப்பட்ட உயிர்களுக்குத் தினைத்துணையேனும் யமதண்டமில்லை சுருதிவாக்கியமாதலால் பின்னும்மற்ற எந்தசமுத்திரக் கரையோரங்களிலாவது தேவபுருஷனாயினு மவனிறப்பானாயின் கழுதையாய்ப் பிறப்பானென்று பெரியோர்களாலும் வேதங்களாலுஞ் சொல்லப்படுவதால் இச்சேதுவின்காற்று விசைகொண்டடிக்கப்பட்ட எல்லைவரையினும் இறந்தவை எக்குற்றங்களைச் செய்த கழுதையாயினும் தேவசொரூபம்பெற்று புண்ணியலோகத்தை யடையுமென்று மறைவிதியிற் கேள்விப்பட்டிருக்கின்றோமாதலால் இத்தன்மைவாய்ந்த அச்சேதுவினுடைய மகிமையை நாம் எவ்வளவென்றுரைப்போம் எப்போதும் மகாவுத்தமகுணச் சாந்த பிரமானந்த தேஜசோடுங்கூடி விளங்குஞ் சேதுமான்மியமிம்படியாக்கும் கேட்டீர்களா மகாரிஷிகளே நாம் உங்களுக்குச் சொல்லிவந்த இச்சேது மான்மியத்தை யார்படித்தாலும் யார்கேட்டாலும் அவரவர்களுடைய தேகத்திலுற்ற வியாதிகளும் துன்பங்களும்நீங்கி அக்கினிஹோத்திரம் வேள்விமுதலியவைகள் செய்தபலனும் சகல தீர்த்தங்களெல்லா மாடியபலனும் சாந்தி முதலிய சாதனங்களை யடைந்துவேதாந்தவிசாரணை செய்யபலனும் ஒருவராலும் ஓதற்கரிதாகிய மகாதபங்களைச்செய்து பெற்றபலனும் பெற்றவர்களாய்ச் சுவர்க்காதி புண்ணிய லோகத்தையடைந்து ஆனந்த போகங்களையும் பேரின்பங்களையும் அனுபவித்துக் கொண்டிருப்பார்கள்.

இதல்லாமலும் பஞ்சவரிகளும் படர்ந்து விளங்காநின்ற கண்களையுடைய சீதா சமேதரான ஸ்ரீராமச் சந்திரனால் பூசிக்கப்பட்ட ஸ்ரீராமநாதன் எழுந்தருளி யிருக்குஞ் சேதுமான்மியமென்னுமிப் புராணத்தில் ஒரு சருக்கமேனும் வாசிக்கச் சொல்லி கேட்டபேர்கள் அனேக யாகாதி கிர்த்தியங்கள் எக்கியங்கள் வேத நிர்ணயந் தப் பாமற்செய்து முடித்த பலனைப் பெறுவார்கள். இரண்டு சருக்கம் வாசித்த பேர்களும் வாசிக்க கேட்ட பேர்களும் பத்துவருடம் வரையில் அஸ்வமேதயாகஞ் செய்து பெற்ற பலனை யடைவார்கள். பத்து சருக்கம் வாசித்தபேர்களும் அவற்றைக் கேட்ட பேர்களும் தெய்வலோகத்தில் தேவேந்திரனோடு கூடியிருந்து நூறு அஸ்வமேதயாகஞ் செய்த பலனைப் பெற்று இந்திரபோகத்தை யனுபவிப்பார்கள் இருபது சருக்கம் வரையில் வாசித்தபேர்களும் வாசிக்க கேட்டபேர்களும் பிரமலோகத்தை யடைந்து பிரமனைப்போற் சொரூபம் பெற்று வாழ்வார்கள் முப்பது சருக்கம் வரையில் வாசித்தபேர்களும் அதனைப் பக்தியோடுங் கேட்டபேர்களும் மகாவிஷ்ணு வாசஞ் செய்யாநின்ற வைகுண்டத்தையடைந்து விஷ்ணுசொரூபம் பெற்று வாழ்வார்கள் நாற்பது சருக்கம் வரையில் வாசித்தவர்களும் கேட்டவர்களும் கைலாசத்திலே சாம்பசிவமூர்த்தியின் சொரூபம் பெற்று ஆனந்த மடைவார்கள்.

இம்மான்மியத்தை முழுதுந்திரிகரணசுத்தியோடுவாசித்தவர்களும் வாசிப்பதைக் கேட்டவர்களும் ஜன்மசாகரத்தைக் கடந்து சிவபதத்தைப் பெற்றிருப்பார்கள் ஆதலாலும் இத்தன்மையாகிய மகிமை பொருந்திய சேதுமான்மியங்களை அடியீறாக அந்தக் கரணத்தை யகற்றித் திரிகரணசுத்தியோடுங் கேட்டபேர்கள் சிவபதத்தைப் பெறுவார்கள் இரண்டு தடவை படித்தவர்களுங் கேட்டவர்களும் சாமீபத்தைப் பெற்று வாழ்வார்கள். மூன்றுவிசை வாசித்தவர்களும் கேட்டவர்களும் சாரூபமென்னும் பதவியைப்பெற்று வாழ்வார்கள் நான்கு தடவை வாசித்தவர்களும் கேட்டவர்களும் அண்டகோடிகளியாவுந் துதிப்பதற்கரிய சாயுச்யமென்னும் பதத்தைபெற்று பேரின்பத்தை யடைவார்கள். இதல்லாமலும் இச்சேது மான்மியத்திலே ஒரு கவிதையினுடைய தாற்பரியமாவது அவற்றில் பாதியாவது காற்பங்காவது அல்லது ஒரு சொல்லாவது ஓரெழுத்தாவது சேதுவென்னும் பேருடனே சொன்னாலும், சிந்தித்தாலும் அன்னவர்கள் செய்த பாபங்களெல்லாந் துலைந்து மேன்மையான பாக்கியத்தைப் பெற்று சக்ரவர்த்திகளாகப் பிறந்து வாழக்கடவார்க

ளென்று பின்னுங்கூறுவார். ஓ முனிவர்களே இச்சேதுபுராணத்தை யார் படித்தாலுங் கேட்டாலும் எவ்வளவு எழுத்துகளைச் சிருட்டித்தாலும் அவ்வளவுக்கு மவர்களைப் பற்றியிருக்கும் பாபங்களும்பிரம் மஹத்தி முதலிய தோஷங்களு மவர்களை விட்டு நீங்கிவிடும் பஞ்ச மாபாதகங்களு மகலுவ தன்றியிற் சேதுமுத லிருபத்துநான்கு தீர்த்துமுமாடிய பலன் சித்தமாய்க் கிடைப்பதோடும், நெடிய கடல் சூழ்ந்த பூமண்டலமுழுதுங் கீர்த்தி நிறைந்து விளங்கும் ஸ்ரீராமமூர்த்தியா லுண்டாகிய சேதுமான்மியத்தைப் பக்தி சிரத்தையோடும் பூரணமா யெழுதப்பட்ட அன்பர்களுக்குத் கோரதபாபங்களெல்லாந் தீர்ந்து புண்ணிய புருஷாளாய் சிவபதமென்னுஞ் சாயுச்ய பதவியை யடைந்து சின்மயானந்த சொரூப சாட்சாத்காரமாகிய அகண்ட பரிபூரணத்திலே கர்ப்பூரதீபம்போற் கலந்து நித்தியமாய் வாழக்கடவார்கள்.

இதன்றியும் இச்சேதுமகத்துவமென்னும் புராணம் எவ்விடத்திலிருக்கின்றதோ அவ்விடமெல்லாம் சேதுவாகவும், கந்த மாதனமாகவும், இராமேச்சுரமாகவும் விளங்குவதோடும் அந்த ஸ்தானங்களிலே பூதப்ரேத பசாசகணங்களும் டாகினி யோகினி முதலியவும் துர்ச்சொப்பனங்களும் கொலை களவு முதலிய வக்கினிபயங்களுந் தேகபீடைகளுங் கிஞ்சித்தேனு மணுகாது இராமநாதர் அவ்விடத்தில் யெப்போதும் வாசம்பண்ணிக் கொண்டிருப்பார் இதல்லாமலு மின்னஞ் சொல்லுகிறோம் கேளுங்கள் மகரிஷிகளேசிரார்த்த காலத்தில் இந்தச் சேதுமான்மியத்தில் ஒரு சருக்கத்தைப் பாராயணஞ் செய்தால் அன்னவரைப் பற்றிய தோஷங்களியாவும் நிவர்த்தியாய்ப் புண்ணிய பலனைப் பெறுவதோடும் அவர்களுடைய பிதுர்க்களும் மனமகிழ்ச்சியுடனே கொடுக்கும் பிண்டதானங்களை யேற்றுக் கொள்வார்கள் இதன்றியும் புண்ய காலமாகிய பருவகாலங்களிலேனும் இம்மான்மியத்தில் ஒரு சருக்கமாவது சருக்கத்துளடங்கிய ஒருகதையாவது அல்லது அவற்றிலோரேடாவது பாதியேடாவது ஓர்வரியாவது படித்தாலும் படிக்கக்கேட்டாலும் அவ்விடத்திலுள்ள பேர்கள் பாக்கியவான்களாயும் கீர்த்திமான்களாயும் குபேரன்போல் வாழ்ந்துகொண்டிருப்பார்கள்.

மேலும் இச்சேது மான்மியத்தை வாசிக்கப்பட்ட பேர்களும் கேட்கப்பட்ட பேர்களும், சத்திர முதலியவைகள், பூங்காவனங்களி

லும் தக்ஷிணாயனத்தில் மார்கழி, ஆவணி. புரட்டாசி மாதங்களிலு
ம் வாரங்களில் சோமவாரம் சுக்ரவார முதலிய நாட்களினும்படிக்
கவுங்கேட்கவும் தீர்த்தங்களாடவும் பிரவேசிப்பாராயின் மகாபலன்
களை யடைந்திருப்பார்கள் இதல்லாமலும் இச்சேதுமான் மியத்தை
வேதவியாச மகரிஷியினது அருளினாலே கேட்கப்பட்ட தவுமியா
சாரியர் பாண்டவர்களுக் குரைத்தவண்ணம் யாமுங்களுக் குரைத்
ததேயன்றி வேறேகற்பனையாக யாதொன்றுஞ் சொல்லவில்லை இ
துவசத்தியமாகவும் வேதசம்மதமாகவும் கர்மகாண்ட ஞானகாண்
ட மிரண்டிற்கு நடுநிலையாய் பேதாபேதமின்றிச் சொல்லி யிருக்கி
றோமாதலால் நீங்களுமுங்களுக்கு அன்பராக விருக்கப்பட்டமாணா
க்கர்களுக்கு உண்மையாய். சொல்லுங்களென்று மகா சந்தோஷத்
தோடு மானந்தக்கண்ணீ ருறுபோற்பெருக தேகமயிர்க் குச்செரிய
தேகத்தினின்று வியர்வைபெருக வாய்குளறகரங்களிரண்டையுஞ்
சிரத்தின்மேற்கூப்பி ஸ்ரீராமநாதன்வாழுஞ் சேதுதநுக்கோடியையு
ங்கந்தமாதனத்தையு மவற்றிலோங்குமகிமைகளையு மனதிற்சிந்தித்
தானந்த பரவசமடைந்துசித்ரதீபம்போல சூதமாமுநிவரிருந்தார்.

அவ்வற்புதத்தைக்கண்ட அங்குள்ளரிஷிகளியாவரு மெழுந்து
ஆனந்தக்கூத்தாடி அர்க்கியபாத்தியமுதலிய சோடசோபசார பூ
சைகள்செய்து தோத்திரம்பண்ணினர்கள் அதுகண்ட சூதமாமுநி
வர் சந்தோஷங்கொண்டு அன்னவர்களது அன்புக்ககமகிழ்ந்து அ
னேக வரப்பிரசாதங்களைத்தந்து ஆசீர்வதித்து சகல முநிவர்களும்
பின்தொடர அன்னவரிடத்தில் விடைபெற்று அவணின்றும் நீங்கி
காசி க்ஷேத்ரத்தில் வியாசபகவானை அநேகரிஷிக்கூட்டத்துடனே
நமஸ்காரஞ்செய்து அடிபணிந்தெழுந்து கரங்களைக்கூப்பி நின்றதம
துமாணாக்கராகிய சூதமாமுனியை வேதவியாசமகரிஷியானவர் கி
ருபாநோக்கோடும் பார்த்து சேயைக்கண்டதாய்போ லடங்காக்கா
தலோடுங்கட்டி உச்சியைமுகந்து அத்தியந்தபிரீபத்தோடும் நோ
க்கி ஓதற்கரியவேதசாஸ்திர புராணங்களின் கரைகண் டிப்பூதலத்
தின்கண் எனக்குக்கீர்த்தி யுண்டாகும்படியாய் மகாமகிமை பொரு
ந்திய இச்சேதுமான்மியத்தை நைமிசாரண்யவாசிகளாகிய முநிவர்
களுக்குசொல்லும்படி நீ பெற்றபேரேபேறென்றநேகமாய் சிலாகித்
தாசீர்வதித்தவணுள முநிவர்களைப் பார்த்து பின்னுங் கூறுவார்.

கேளுங்கள் முநிவர்களே பெருமைபொருந்திய இச்சேது ம
கத்துவத்தை நாமறிந்ததேயல்லது பிறரறியமாட்டாராயினும் நம்
மாலதிற் சில வர்த்தமானங்களை யுணர்ந்த இச்சூதமாமுநிவராலே

சொல்லப்பட்ட சேதுமான்மியத்தை நீங்கள் கேட்டீராதலால் இது வேதாகமசாஸ்திர புரான இதிகாசங்களுக்கெல்லாம் மேன்மையான தெனக்கருதி தவுமியர் எனது அன்பின் பெருக்கால் தருமராசனுக்கு விருப்பினோடு உரைத்ததுபோல் நீங்கள் சதாகாலமும் பக்திசிரத்தையோடு இதனைப்படிக்கவும் பிறருக்கோதவும் வேண்டுமென் றுரைத்தவராயங்குள முனிவர்களுக்கெல்லா மாசி கூறியூகமோங்கிய சூதமாமுனிவரோடும் ரிஷிக்கூட்டத்தோடும், வேதவியாச முனிவரானவர் விருஷபத்துவசத்தோடும் மான்மழு சதுர்ப்புஜ காளகண்ட திரிநேத்ரதாரியாய் விளங்கும் சிவசொரூபமாய் ஸ்ரீகைலாசத்தை யடைந்தார்.

சேதுபலச் சரித்திரம் முற்றிற்று.

---

கவி.

ஆர்த்ததிறைக் கடலாடை யங்கணில மெங்கனுசென் றளவிலாத, கீர்த்திதரு மெனினவற்றின் கிடைப்பரிதா மெனிற் சீதைகேள்வன்போற்றும், மெயிர்த்தபுனல் மதிவேணி இராமேசன் புராணத்தை யெழுதுமன்பர், தீர்த்தலரும் பவந்துடைத்துச் சாயுச்ய பதம்பெருவர் திண்ணந்தானே.

இந்தமான்மியருக்கு மில்லிடமே சேதுவென்னில் யாங்கண்
மந்தமனெழுதர்க்கிரக பீடைவியாதி கால்கை கமருளவேதான்
முந்துபயஞ் சோரர்பயந் தீர்ந்துநான்கு பொழியுந்தீர்த்தங்
கந்தமாதனயன் மாலிராம நாயகனுளுங்கலந்து வாழ்வார்,

இக்கதையைப் படித்தோர்கள் புகழ்ந்தோர்கள் யெவரும் போற்ற, திக்கெங்கும் புகழ்கீர்த்திபடைத்திடுவர் மென்மேலுஞ் செல்வமோங்கும், மக்களையும் பெற்றுமிக வாழ்ந்திருந்து சேதுவிடமகிமையாலே, யெக்குலமும் பவித்திரமாய் நித்தியமங்களமாக யிருப்பர்முற்றே.

ஸ்ரீ இராமேச்சுரமென்னும்

சேதுஸ்தல புராண வசனகாவியம்

முற்றிற்று.

---



உ

கடவுள் துணை.

## திரு இராமேச்சுரம்
## திருஞானசம்பந்த சுவாமிகள்
திருவாய் மலர்ந்தருளிய

# தேவாரப் பதிகம்.

பண் - காந்தார பஞ்சமம்.

அலைவளர்தண்மதியோடயலேயடக்கியுமை
முலைவளர்பாகமுயங்கவல்லமுதல்வன்முனி
யிலைவளர்தாழைகள்விம்முகானலிராமேச்சுரந்
தலைவளர்கோலநன்மாலையன்றானிருந்தாட்சியே. க

தேவியைவவ்வியதென்னிலங்கைத்தசமாமுகன்
பூவியலும்முடிபொன்றுவித்தபழிபோயற
வேவியலுஞ்சிலையண்ணல்செய்தவிராமேச்சுரம்
மேவியசிந்தையினார்கடம்வினைவீடுமே. உ

மானனநோக்கிவைதேகிதன்னையொருமாயையாற்
கானதில்வவ்வியகாரரக்கனுயிர்செற்றவ
னீனமில்லாப்புகழண்ணல்செய்தவிராமேச்சரம்
ஞானமுநன்பொருளாகிநின்றதொருநன்மையே. ௩

உரையுணராதவன்காமமென்றமுறுவேட்கையான்
வரைபொருதோளிறச்செற்றவில்லிமகிழ்ந்தேத்திய
விரைமவுங்கடலோதல்குமிராமேச்சுரந்
தரையரவாடநின்றாடல்பேணுமம்மானல்லனே. ௪

ஊருடைவெண்டலைகையிலேந்திப்பலவூர்தொறும்
வீருடைமங்கையரைப்பெய்யவீரலார்ந்ததோ
ரேருடைவெல்கோயெந்தைமேயவிராமேச்சுரம்
பேருடையான்பெயரேத்துமாந்தர்பிணிபேருமே. ௫

அணையலைசூழ்கடலன்றடைத்துவழிசெய்தவன்
பணையிலங்கும்முடிபத்திறுத்தபழிபோக்கிய

விணையிலியென்றமிருந்தகோயிலிராமேச்சுரந்
துணையிலிதுதூமலர்ப்பாதமேத்தத்துயர்நீங்குமே. ௬

சனிபுதன்ஞாயிறுவெள்ளிதிங்கட்பலதீயன
முனிவன்செய்துகந்தானைவென்றவ்வினைமூடிட
வினியருணல்கிடென்றன்னல்செய்தவிராமேச்சுரம்
பனிமதிசூடிநின்றாடவல்லபரமேட்டியே. ௭

பெருவரையன்றெடுத்தேந்தினான்றன்பெயர்சாய்கெட
வருவரையாலடர்த்தன்றுநல்கியயன்மாலெனு
மிருவர்நாடிநின்றேத்துகோயிலிராமேச்சுரத்
தொருவனுமேபலவாகிநின்றதொருவண்ணமே. ௮

சாக்கியர்வன்சமண்கையர்மெய்யிற்றடுமாற்றத்தா
வாக்கியவுமுரைபற்றுவிட்டுமதிலொண்மையா
லேக்கியஞ்சிலையண்ணல்செய்தவிராமேச்சுர
பாக்கியசெல்வனையேத்திவாழ்மின்னருளாகவே. ௯

பகலவன்மீதியங்காமைக்காத்தபதியோன்றனை
யிகலவீழ்த்தவனேத்துகோயிலிராமேச்சுரம்
புகலியுண்ஞானசம்பந்தன்சொன்னதமிழ்புந்தியா
மகலிடமெங்குநின்றேத்தவல்லார்க்கில்லையல்லலே. ௧௦

திருச்சிற்றம்பலம்.

---

பண் - பழம் பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்.

திரிதருமாமணிநாகமாடத்திளைத்தொருதீயழல்வாய்
நரிகதிக்கவெரியேந்தியாடுநலமேதெரிந்துணர்மா
ரெரிகதிர்முத்தமிலங்குகானலிராமேச்சுரமேய
விரிநிதிற்வெண்பிறைமல்குசென்னிவிமலர்செயுஞ்செயலே. ௧

பொறிகிளர்பாம்பரையார்த்தயரலபுரிவோடுமைபடாத
தெறிகிளரப்பெயர்ந்தெல்லியாடுந்திறமேதெரிந்துணர்மக
ரெறிகிளர்வெண்டிரைவந்துமேருமிராமேச்சுரமேய
மறிகிளர்மான்மழுப்புல்குகையெம்மண்ணளர்செயுஞ்செயலே.

அலைவளர்தண்புனல்வார்சடைமேலடக்கியொருபாக
மலைவளர்காதலிபாடவாடிமயக்காவருமாட்சி
யிலைவளர்தாழைமுகிழ்விரியுமிராமேச்சுரமேயார்
தலைவளர்கோலநன்மாலைசூடுந்தலைவர்செய்யுஞ்செயலே. ௩

மாதனநேரிழையேர்தடங்கண்மலையான்மகள்பாடத்
தேறெரியங்கையிலேந்தியாடுந்திறமேதெரிந்துணர்வா
ரேதமிலார்தொழுதேத்தியவாழ்த்துமிராமேச்சரமேயார்
போதுவெண்டிங்கள்பைங்கொன்றைசூடும்புநிதர்செயுஞ்செயலே. ௪

சூலமோடொண்மழுவின்றிலங்கச்சுடுகாடிடமாகக்
கோலநன்மாதுடன்பாடவாடுங்குணமேகுறித்துணர்வா
ரேலாறும்பொழில்வண்டியாடுமிராமேச்சரமேயார்
நீலமார்கண்டமுடையவெங்கணிமலர்செயுஞ்செயலே. ௫

கணையிணைவெஞ்சிலைகையிலேந்திக்காமனைக்காய்ந்தவர்தா
மிணையிணைநோக்கிநல்லாளொடாடுமியல்பினராகிநல்ல
விணைமலர்மேலனம்வைகுகானலிராமேச்சுரமேயா
ரணையிணைபுல்குகரந்தைசூடுமடிகள்செயுஞ்செயலே. ௬

நீரினார்புன்சடையின்தாழநெடுவெண்மதிசூடி
மூரினார்துஞ்சிருள்பாடியாடுமுவகைதெரிந்துணர்வா
ரேரினார்பைம்பொழில்வண்டுபாடுதுராமேச்சுரமேய
காரினார்கொன்றைவெண்டிங்கள்சூடுங்கடவுள்செயுஞ்செயலே. ௭

பொன்றிகழ்சுண்ணவெண்ணீறுபூசிப்புலித்தோலுடையாக
மின்றிகழ்சோதியர்பாடலாண்டன்மிக்கார்வருமாட்சி
யென்றுநல்லோர்கள்பரவியேத்துமிராமேச்சரமேயார்
குன்றானன்றரக்கன்றடர்ந்தோளடர்த்தார்கொளுங்கொள்கையே ௮

கோவலனான்முகனேக்கொணக்குழகனழகாய
மேவலனொள்ளெரியேந்தியாடுமினமயொரிறைமெய்ம்மை
யேவலனார்புகழ்ந்தேத்திவாழ்த்துமிராமேச்சுரமோ
சேவலவெல்கொடியேந்துகொள்கைஎம்மிறைவர்செயுஞ்செயலே. ௯

பின்னெடுமுன்னிதட்டைசத்திப்பிரட்டேதிரிவாரும்
பொன்னெடுஞ்சீவரப்போர்வையார்கள்புறங்கூறல்கேளாதே
மின்னெடுஞ்சோலைவண்டியார்முரலுமிராமேச்சுரமேய
பன்னெடுவெண்டலைகொண்டுழலும்பரமர்செயஞ்செயலே. ௧௦

தேவியைவவ்வியதென்னிலங்கையன்றிறல்வாட்டி
யேவியல்வெஞ்சிலையண்ணல்நண்ணுமிராமேச்சரத்தாரை
நாவியன்ஞானசம்பந்தனல்லமொழியானவின்றேத்தும்
பாவியன்மாலைவல்லாரவர்தம்வினையாயினபற்றறுமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரப்பதிகம்.

பண்—திருநேரிசை.

பாசமுங்கழிக்ககில்லாவரக்கரைப்படுத்துத்தக்க
வாசமிக்கலர்கள்கொண்டுமதியினான்மால்செய்கோயில்
நேசமிக்கன்பினாலேநினைமினீர்நின்றுநாளுந்
தேசமிக்கானிருந்ததிருவிராமேச்சுரமே. ௧

முற்றினநாள்களென்றுமுடிப்பதேகாரணமா
யுற்றவன்போர்களாலேவுணர்விலாவரக்கர்தம்மைச்
செற்றமால்செதகோயிற்றிருவிராமேச்சரத்தைப்
பற்றிநீபரவுநெஞ்சேபடர்சடையீசன்பாலே. ௨

கடலிடைமலைகடம்மாலடைத்துமால்கருமமுற்றித்
திடலிடைச்செய்தகோயிற்றிருவிராமேச்சரத்தைத்
தொடலிடைவைத்துநாவிற்சுழல்கின்றேன்றாய்மையின்றி
யுடலிடைநின்றும்பேராவைவராட்டுண்டுநானே. ௩

குன்றுபோற்றோளுடையகுணமிலாவரக்கர்தம்மைக்
கொன்றுபோராழியம்பால்வேட்கையாற்செய்தகோயி
னன்றுபோனெஞ்சமேநீநன்மையையறிதியாயிற்
சென்றுநீதொழுதுய்கண்டாய்திருவிராமேச்சரமே. ௪

வீரமிக்கெயிறுகாட்டிவிண்ணுறநீண்டரக்கன்
கூரமிக்கவனைச்சென்றுகொன்றுடன்கடற்படுத்த
தீரமிக்கானிருந்ததிருவிராமேச்சரத்தைக்
கோரமிக்கார்தவத்தார்கூடுவார்குறிப்புளாரே. ௫

ஆர்வலர்நம்மின்மிக்காறென்றவ்வரக்கர்கூடிப்
போர்வலஞ்செய்துமிக்குப்பொருதவர்தம்மைவீட்டித்
தேர்வலஞ்செற்றமால்செய்திருவிராமேச்சரத்தைச்
சேர்மடநெஞ்சமேநீசெஞ்சடையெந்தைபாலே. ௬

வாக்கினலின்புரைத்துவாழ்கிலார்தம்மையெல்லாம்
போக்கினர்புடைத்தவர்களுயிர்தனையுண்டுமாறுன்
றேக்குரீர்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தை
நோக்கினல்வணங்குவார்க்குநோய்வினை நணுகுமன்றே. ௭

பலவுநாடுமைசெய்துபார்தன்மேற்குழுமிவந்து
கொலவிலார்கொடியராரக்கரைக்கொன்றவீழ்த்த
சிலையினன்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தைத்
தலையினல்வணங்குவார்கடலைவராந்தவமாதமே. ௮

கோடிமாதவங்கள்செய்துகுன்றினர்தம்மையெல்லாம்
வீடவேசக்கரத்தாலெறிந்துபின்னன்புகொண்டு
தேடிமால்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தை
நாடிவாழ்நெஞ்சமேநீநன்னெறியாகுமன்றே. ௯

வன்கண்ணர்வாளரக்கர்வாழ்வினையொன்றறியார்
புன்கண்ணராகிநின்றுபோர்கள்செய்தாரைமாட்டிச்
செங்கண்மால்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தை
தங்கணலெய்தவல்லார்தாழ்வராந்தலைவன்பாலே. ௧0

வரைகளொத்தேயுயர்ந்தமணிமுடியரக்கர்கோனை
விரையமுற்றறவொடுக்கிமீண்டுமால்செய்தகோயிற்
றிரைகண்முத்தால்வணங்குந்திருவிராமேச்சுரத்தை
யுரைகள்பத்தாலுரைப்பாருள்குவாரன்பினலே. ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

ஸ்ரீராமநாத சுவாமிபேரில்

# போற்றிப் பதிகம்.



காப்பு விருத்தம்.

அத்துவித வழியருளும் அனங்கன் வாழியை யகற்று
மைந்து பூதம்
மொத்து வொரு நிலையாகில் ஒங்குபதவியை யளிக்கும்
முபர் உண்டாக்குஞ்
சுத்த சைதன்ய மதாய்ச் சுடரொளியாய் யெவருயிர்க்குந்
துலங்காநின்ற
மத்தகஜமாமுக ஞகுவாகனன் கணபதியின்
மலர்த்தாள் தானே ௧

தேவாரப்பண்-நேரிசை.

உம்பர்நாயகனேபோற்றி உயர்மதிச்சடையாய்போற்றி
அம்புயற்கண்ணன்வேத னூர்க்கறிதானாய்போற்றி
தம்பமென்றடைந்ததொண்டர் தனக்கருள்செய்தாய்போற்றி
நம்பினேன்சேதுவாழும் ராமநாதனேபோற்றிபோற்றி. ௨

ஆதியேமுதலேபோற்றி அருமறைப்பொருளேபோற்றி
சோதியேசுடரேபோற்றி சுயம்பிரகாசாபோற்றி
பாதியேமூவர்போற்றி பணிந்திடும்பதனேபைம்பொன்
சேதுவில்மேவிவாழுந் தேவனேபோற்றிபோற்றி. ௩

வாசவன்மறைவல்லோனும் வந்துவந்திறைஞ்சுநித்தம்
பூசிதமுதல்வாதேவைப் புறக்கும்ராமேச்சுரத்தில்
மாசிலாதெழுந்தமூர்த்தி மலைமகள்பாகம்வைத்து
நேயமாய்யென்னையாளும் நிர்மலாபோற்றிபோற்றி. ௪

சச்சிதானந்தமோனச் சதாசிவப்பொருளேபோற்றி
எச்சகப்போற்றுவேத இரவிதன்பாகாபோற்றி
நச்சுடர்கண்ணுயென்னை நாளும்ரக்ஷிப்பாய்போற்றி
பச்சைமால்தேடிக்காணுப் பரஞ்சுடருருவேபோற்றி. ௫

விரிபுவிவானுசொர்க்கம் மேலமற்றேனைவயென்னும்
பரிகடல்புவியில்வேதன் மனுக்களும்படைத்துக்காத்துத்
திரிபுரமெரித்துமாரன் செடமெலாந்தாக்கிநின்ற
அரிதவமோங்கச்செய்யும் மாதிராமேசாபோற்றி. ௬

முப்பரம்பொருளேதேவர் முதல்வனேமுடிவிலாத
கற்பகக்கனியேமோனக் கடவுளேகருணைவாழ்வே
தப்புருமுமையாள்பாகத் துலங்கும்மிராமேச்சரத்தில்
நற்பதமருள்செய்தேவ ராமநாதனேபோற்றி. ௭

வேதன்மால்கரிதாய்நின்றாய் விருந்துக்கோர்பிள்ளைதின்றாய்
சீதளமதிபுனைந்தாய் திகழ்கரியுரியைப்போர்த்தாய்
மாதவயோகியாரும் வந்தனைகாணொணாத
நாதனேஇராமநாதா நாண்மலர்பாதம்போற்றி. ௮

தேசுலாவும் மலர்மிசையோன் றேடவரிதா யிலங்குஞ்செல்வா போற்றி, பாசவினைத் தொடாருக்கும் பரமாதிப்பொருளான பரமேபோற்றிப், பேசரிய திருமார்பண்பவமகற்றி யெனையாண்டசெல்வாபோற்றி, வாசாமகோசரமே பழம்பொருளே சுடரொளியே மலர்த்தாள்போற்றி. ௯

பந்தவினைப் பவங்களெல்லாம் பரந்தோடும் சாயுச்சிய பதவி சேர்க்கும், இந்திரன் வானோர்போல மோக்ஷ மெய்தியபேர் இணை யொருவரில்லா தாக்குஞ் செந்திருவாழ் உயர்வுபெருஞ் சேதுநகர் செழித்தோங்குஞ், சித்தானந்தச், சந்திரசேகரர் பதத்தைத் தான் பணிந்தோர்க் கிவையெல்லாந் தழைக்கமாதோ.

திருச்சிற்றம்பலம்.

---

தாயுமான சுவாமிகள் இயற்றியது.

## ஸ்ரீபர்வதவர்த்தினி அம்மன்பேரில்

## ப தி க ம்.

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கண் மித்திரர்கள்
பக்கமுண்டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின் றருளிற்
கருத்தொன் று முண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தையுண்டபர
ஞானவானந்தவொளியே
நாதாந்த ரூபமே வேதாந்தமோனமே
நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூதனன் றங்கையே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காதலிப் பெணுமையே. (௧)

தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையிலே நடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே யடியிலேமேல்

பூரித்த மூலையிலே நிற்கின்ற நிலையிலே
 புத்திதனை நுழையவிட்டு
நெட்டிலே யலைபாம லரிவிலே பொறையிலே
 நின்னடியார் கூட்டத்திலே
நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
 னேயத்திலேயு னிருதாள்
மட்டிலே மனதுசெலநினதருளு மருள்வையோ
 வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியாயுதித்தமலை
 வளர் காதலிப்பெ ணுமையே. (௨)

பூதமுத லாகவே நாதபரியந்தமும்
 பொய்யென் றெனைக்காட்டியென்
போதத்தி னடுவாகி யடிமீறு மில்லாத
 போதபூ ரணவெளிக்குள்
ஏதுமற நில்லென் றுபாயமா வைத்துநினை
 எல்லாஞ்செய் வல்லசித்தாம்
இன்பவுரு வைத்தந்த வன்னையே நின்னையே
 யெளியென் மறந்துய்வனோ
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
 விளக்குமுக் கண்ணிலார்க்கும்
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
 வீறுவா தம்புகலுவாய்
வாதநோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
 மாமருந் துக்கமிர்தமே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
 வளர்காதலிப் பெணுமையே. (௩)

மிடியிட்ட வாழ்க்கையா லுப்பிட்ட கலமெனவு
 மெய்பலா முள்ளு டைந்து
வீறிட்ட செல்வர்தந் தலைவாயில் வாசமாய்
 வேதனைகளுறவேதனும்
துடியிட்ட வெவ்வினையை யேவினுன் பாவிநான்
 தொடரிட்ட தொழில்க ளெல்லாம்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
 றொண்டர்பணி செய்வ தென்றோ
வடியிட்ட செந்தமிழி னருமையிட் டாளுரி
 லரிவையோர் பரவை வாயில்

அம்மட்டுமெடியிட்டு நடைநடந்தருளடிக
    ளடியீது முடியீதென
வடியிட்ட மறைபேசு பச்சிளங் கிள்ளையே
    வளமருவு தேவையரசே
வரைராஜ னுக்கிருகண் மணியாயுதித்தமலை
    வளர்காதலிப் பெணுமையே. (௪)

பூரணி புராதநி சுமங்கலை சுதந்தரி
    புராந்தகி த்ரியம்பகி யெழில்
புங்கவி விளங்குசிவ சங்கரி சஹஸ்ரதள
    புஷ்பமிசை வீற்றிருக்கும்
நாரணி மநாதீத நாயகி குணாதீத
    நாதாந்த சத்தி யென்றுன்
நாமமே யுச்சரித் திடுமெடியார் நாமமே
    நானுச் சரிக்கவசமோ
ஆரணி சடைக்கடவு ளாரணி யெனப்புகழு
    மகிலாண்ட கோடி யீன்ற
அன்னையே பின்னையுங் கன்னியென மறைபேசு
    மானந்த ரூபமயிலே
வாரணியு மிருகொங்கை மாதர் மகிழ் கங்கைபுகழ்
    வளமருவு தேவை யரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
    வளர்காதலிப் பெணுமையே. (௫)

பாகமோ பெறவுனைப்பாடவரி யேன்மல
    பரிபாகம் வரவு மனதில்
பண்புமோ சற்றுமிலை நியமமோ செய்திடப்
    பாவியென் பாப ரூபம்
தேகமோ திடமில்லை ஞானமோ கனவிலுஞ்
    சிந்தியேன் பே ரின்பமோ
சேரவென் றுற்கன் மனதுமோ வெத்தவுஞ்
    சிந்திக்கு தென் செய்குவேன்
மோகமோ மதமோ குரோதமோலோபமோ
    முற்றுமாச் சரிய மோதான்
முறியிட் டெனைக்கொள்ளு நிதியமோ தேடவெணின்
    முசுவரி வண்டு போல

மாகமோ டவும்வல்ல னெனையாள வல்லையோ
வளமருவு தேவை யரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே. (சு)

தூளேறு தூசுபோன் வினையேறு மெய்யெனுந்
தொக்கினுட் சிக்கி நாளும்
சுழலேறு காற்றினிடை யழலேறு பஞ்செனச்
சூறையிட் டறிவை யெல்லாம்
நாளேற நாளேற வார்த்திக மெனுங்கூற்றின்
நட்பேற வுள்ளு டைந்து
நயனங்க ளற்றதோ ரேரு போலவே
நானிலந்தனி லலையவோ
வேளேறு தந்தியைக் கனதந்தி யுடன்வென்று
விரையேறு மாலைசூடி
விண்ணேறு மேகங்கள் வெற்பேறி மறைவுற
வெருட்டிய கருங்கூந்தலாய்
வாளேறு கண்ணியே விடையேறு மெம்பிரான்
மனதுக் கிசைந்த மயிலே
வரைராஜ னுக்கிருகண் மணியாயுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே. (எ)

பூதமொடு பழகிவளரிந்திரிய மாம்பேய்கள்
புந்திமுத லான பேய்கள்
போராடு கோபாதி ராக்ஷசப் பேய்களென்
போதத்தை யூடழித்து
வேதனை வளர்த்திடச் சதுர்வேத வஞ்சன்
விதித்தா னிவைக ளெல்லாம்
வீழும் படிக்குனது மௌனமந் த்ராதிக்ய
வித்தையை வியந் தருள்வையோ
நாதவடி வாகிய மஹாமந்த்ர ரூபியே
நாதாந்த வெட்ட வெளியே
நற்சமய மானபயிர் தழையவரு மேகமே
ஞானவா னந்த மயிலே
வாதமிடு பரசமயம் யாவுக்கு முணர்வரிய
மகிமைபெறு பெரிய பொருளே
வரைராஜா னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே (அ)

ராமேச்சுரப் குரு பரதாசர் இயற்றியது.

ஸ்ரீபருவதவர்த்தினி அம்மன்பேரில்

# அனுபூதி

---

விநாயகர் தோத்திரம்.

செங்கண்டிருமால் பணிசீர்தேவைத்
துங்கப்பிறையணி துதிஇராமேச்சர்
பங்கப்பிரியா ளனுபூதிடகர்
அங்கைம்முக வாதிவிநாயகனே.

பூமாதுயர்சொ லிலங்குயிலே
காமாரியோடாடல் செய்காரணியே
கோமானிமவானருள் கொம்பனையே
பாமேவியபருவத வர்த்தனியே. (க)

அணிமாதிகளந்தன னிந்திரனும்
பணிசெய்துயர்வான பதந்தருவாய்
மணிவல்லரவாபரணச் சிவனர்
கனியேதவமலை வளர்காதலியே. (உ)

முருகார்குழல்மாதர்கள் மோகமெனும்
பெருவாருதிமூழ்கிய பித்தனெனைப்
பரிவாயுன்தாழடி பன்னறிதோ
மருவாரிமைமலை வளர்மாதவளே. (ஙா)

வாலைப்பிறைவேணி வளர்ந்துயர்வே
வேலைப்பெருவேலை விதித்தவளே
தாலத்திலுனக்கிணை தானுளதோ
பாலர்க்கருள் பருவதவர்த்தினியே. (௪)

கருவித்திரலைம்பொரி கால்பூதம்
வருமோகமலாதி தயங்குமதத்
துருவாமெனதூல துடற்கைவெலும்
மருவார்குழல்மலைவளர் மாதவளே. (ரு)

களியா துயர்தேவை யெனும்நகரில்
அளியாதவரந் தருவாதியொடுங்
களிகூறெழு காரணிகாசினியோர்
பளியைத்தவிர் பருவதவர்த்தினியே. (சா)

கானேகடலே கனமேமனமே
வானேபுவியே மரையேவிரையே
பானேமதியே பாரத்விதமே
மானேதேனே மலையின்மகளே. (எ)

சத்தேசித்தேதனி யேகனியே
முத்தேமுதலே மூவாக்கினியே
யெத்தேசர்களும் பணியென்னனையே
பத்தர்க்கியம்பலை வளர்மாதவளே. (அ)

கடமாமுகனுங் கனவேலனுமுன்
னுடமாமுலையூரலையுண் டனைவோர்
தடமேழ்புவியோர் துதிவாங்கினர்கள்
படர்வேல்விழிபருவத வர்த்தனியே. (௯)

தசகண்டனைவென் றயர்தரசரதி
வசைமாபழிவாங்கின வானவரோ
டசையாதவரநல்கியு ஆரமுதே
திசையோர்புகழ் பருவதச்சேயிளையே. (க0)

பாலாழிகடைந்திடு பண்புதிரு
மால்சோதரிமங்கை மனோன்மணியே
ஆலத்தையருந்திய ஆயிழையே
கோலத்துயர்மலை வளர்கோமளமே. (கக)

அன்பேயெனதாருயி ராகியருங்
கொம்பேயருங்கோ மகளேகுளகன்
தென்பார்புகள்தேவை நகர்க்கரசே
இன்பந்தருபருவத யேந்திழையே. (கஉ)

துடியாரிடை சோதி முகப்பிரபையே
கடியார்மலர்மாலை கனங்குழலேழ்
படியோர்பணிபர்த சரோருகமே
அடியார்க்கருள்பருவத அம்பிகையே. (கங)

சிலையிக்குமலர்க் கணைசேர்துடியும்
நலபாசமோடாழி நலந்திகளுங்
குலமாதவரிந்திரர் கொண்டாட
மலையாதுரிவந்தருள் மலைமாதே. (கச)

புஞ்சொற்குயிலாகிய புத்தமுதே
கஞ்செத்தெளு கன்னிகலாநிதியே
நஞ்சொக்கும விழித்தடநங்கையரே
பஞ்சைக்கருள் பருவதவர்த்தனியே. (கரு)

முக்கட்டிறைபாக முயன்றவளே
சொக்கத்துயர்மேவு சுயஞ்சோதி
யெக்காலுமுனைப்பணிவே னியல்பாய்
மைக்கால்விழிமலை வளர் மாதவளே. (கசு)

அணிமாதிகள் மாபவன்வாணிமுதல்
பணிமாமயிலை படர்சின்மயமே
மணிவாலொளியே மழுவாழனனெடு
துணிவாளுயர்வே துதியம்பிகையே. (கஎ)

துரிதத்திதசோதிய தீதவதி
பரிதிப்பிரபையான பரஞ்சோதி
திருவுக்குயர்வே திருநீரணியே
கருவுக்குருமலைவளர் காதலியே. (கஅ)

தன்னந்தனியாகிய தாவரமே
உன்னன்பன்துயர்க்குயர் பாருனதாள்
சின்னப்படுதீவினை தீர்க்கரிதோ
கன்னல்சொரிமலை வளர்காதலியே. (கக)

கலியால்மெலியாது கனம்பெருக
நலிபாதுடலுக்கு நலந்தருவாய்
புலியாடைதரித்த புராதனரின்
மலிமோகம் வரச்செயுமலைமகளே. (உ0)

மேதித்தலைமீதில் னடம்புரிவோய்
சோதிப்பிரபையா சுராதரியே
கோதிர்க்கணியான குணக்குன்றே
மாதுற்றுயர்மலை வளர்மாதவளே. (உக)

காலேகடலே கனலேபுவியே
மாலேமலையே மருவேகருவே
பாலேபழமே பரமேஅரமே
சேலார்விழியேதிகள் சின்மயமே. (உஉ)

விதியைத்தலைவெட்டிய வேதகியே
மதியினுடல் தேயமதித்தவளே
கொதிகொள்விட முண்டகுலக்கொடியே
பதியேசைலந்தரு பைந்தொடியே. (உங)

உதத்திப்புடைசூழ் நகருக்குயர்வே
பதிசாலமொலித்திடு பைங்கொம்பே
சதாகாலமுனைத்துதி செய்தமியேன்
நிதவாழ்வுதரும் பொருள்நீதானே. (உச)

சந்திரபிரபையான தயாநிதியே
கந்தப்பரிமள சுககாரிளேயே
சிந்தைத்துயர்தீர் பரதேவதியே
நந்தா துயர்மலை வளர்நங்கையரே. (உரு)

சங்கத்தமிழ்தந்த சடாதாரி
பங்கேருகமான பரஞ்சோதி
சிங்காரவினோத செகச்சோதி
மங்கா துயர்மலை வளர்மாதேவி. (உசு)

கருணைப்பிரவாக முருங்கண்ணே
அருணைப்பிரகாச நலத்தண்ணே
தருணக்கனியாகிய தரமின்னே
பருவம்மணிமலை வளர்பசும்பொன்னே. (உஎ)

உனையன்றியெனக் கொருதாயுளதோ
யுனையன்றியுயிர்த் துணைவேருளதோ
பனம்கம்மணிபைம் பொருளாதியொடுங்
கனமுந்தருமலைவளர் காதலியே. (உஅ)

மாலுற்றயருஞ் சுபமங்கலையே
வேலற்குத்தாயெனும் வேதகியே
தாலத்திலுனக்கிணை தானுளதோ
சீலத்துயர்பருவத செம்மணியே. (உகூ)

முக்கோணமுயங்கிய முக்கனியே
சக்கோணத்துயர்வாகிய சானுவியே
யெக்காலத்திலுனைப்பணிவே னியல்பாய்
தக்கோர்பனிமலை வளர்தையலரே. (௩௦)

முத்தாரமுயங்கிட மூதறிவோர்
சுத்தச்சனகாதியர் சுந்தரரோ
டெத்திக்கும்வணங்க வெழுந்தெனது
சித்தப்படியேசெய்கிர்பை சேயிளேயே. (௩க)

மாதங்கிமலர்க்கொடி வாணிதொழும்
மாதங்கமுகத்தனை யீன்றமணி
சீதப்புனல்சேது வில்மேவுதிரு
ஆதிப்பொருள் மலைவளாம்பிகையே. (௩௨)

பிரபஞ்சமெனும் பெருவாருதியை
கரைகண்டிடவே யருள்காரணியே
உரைதங்கியஉத்தமி யும்பர்தொளும்
விரையேர்குழல் பருவதவேதகியே. (௩௩)

சதுர்வேதமுயங்கிய தண்பதமே
பதுமாசனியோர் பணிசெய்தவமே
விதுவேமும்விண்ப விளங்கொளினர்
நதியேதருமலைவளர் காதலியே. (௩௪)

நந்தாதுலகோர் பணிராமீச்சர்
சிந்தாமணியாகிய சின்மயமே
சந்தாடவிசூழ் புவித்தார்மணியே
மந்தாகினிமலை வளர்மங்கையரே. ௩௫

மாலுன்வடி வங்கொள வல்பரமன்
மேலுன்மயலாகி விரும்பலையா
தாலம்பணிசங் கவிசதுர்வேதம்
நாலும்பிரியாதுயர் நாயகியே. (௩௬)

புலியும்மரவுந்துதி பர்ப்பதமே
குலிசன்முதலோர் பணிகோகிலமே
கலியால்மெலியாது கனந்தருனின்
மதியேயுயர்மலை வளர்மாதவளே. (௩௭)

நித்தர்க்கொரு பாகணிரைந்துவர
முத்தர்க்குயர் மித்தெனமூவுலகும்
பெத்தும்பர் பெருந்தகைவாழ்வுதருஞ்
சித்தேதிருநீலிசிகாமணியே. (௩௮)

அன்பற்றவரிங்க ளெனும்படியே
துன்பத்தையகற்றிடு தூமணியே
தென்பார்புகழ்சேது மன்னன்பணியுஞ்
சன்பேசிவனார்மகிழ் சாஸ்வதமே. (௩௯)

வடியான்விழிமோக மினார்வலையில்
பிடிப்பட்டுவிழித்திடு பேதையெனை
துடியாரிடைசுந்தரி மீட்கறிதோ
கடியார்குழல்மலை வளர்காதலியே. (சo)

நித்தன்பிரியாத நிராதாரி
சித்தியருளக் கரிதேவிசீதா
பத்தர்கருள் செய்திடுகபாலி
கத்தோர்பணிமலை வளர்க்காதலியே. (சக)

நாகத்தொலிபோர் வைதரித்துநரும்
நாகப்பணியணிதிகழ் ராமேசர்
பாதங்கவர்பைங் கொடியேகிர்பைதா
யேகம்பிகைமலைவளர் வோதிமமே. (சஉ)

புரமூன்றெரிசெய்த புராதனரின்
வரமேவுமதங்கி அவந்திமலர்
கருவவேசுபமங்கள சானுவிசித்
துருவேமுயங்கிய சுந்தரியே. (சங)

சனகச்சனகாதி சனந்தனரும்
அனமொழிசைபந்தா னிந்திரனும்
உனதன்னடிமைத் துயருக்குயர்வே
கனமெய்த்திடுமலை வளர்காதலியே. (சச)

நீயேஉலகெங்கும் நிறைந்தவளே
நீயேயுயிருக்குயிர் நின்றதுவே
தாயேயுனையல்லது தாயுளதோ
தாயேசைலங் தருதையலரே. (சரு)

கச்சார்முலைமங்கையர் கண்ணேரு
தச்சாங்கமயக்கொடு தளர்வேனு
நச்சாரரவிற்றுயில் நண்மாலின்
நிச்சோதரிமலை வளர்மாதவளே. (சசு)

அம்மந்திரமான அருந்தேவி
சிம்மத்திலெழுந் திடுதிரிசூலி
கம்மென்றெழுவாச கனங்குழலே
சம்பந்தர்பணிந்திடு சாஸ்வதமே. (சஎ)

கருணாலயமான கலாநிதியே
அருணாம்புயமாலி அருந்தவர்கள்
பெருமோனபதந் தருபேரரசே
தருமேதிமிதித்துயர் சங்கரியே. (௪௮)

இரதியிந்திரைவாணி நலந்தருளும்
மதியம்பரிதித்திரள் மால்வேதன்
நிதமும்புடைசூள் பணியும்விமலி
பததாமரையைத் தருபார்வதியே. (௪௯)

கருவேயுருவே கனமேமனமே
அருளேதிருவே அனேயேயெனேயாள்
தருவேதுணையே சலதிப்புடைசூழ்
மருவேகிருபைசெய் மலேயின்மகளே. (௫0)

வாழி விருத்தம்.

ஆதிவாராமீச்சர் பருவதவர்த்தனி யெனது அன்னேவாழி
சாதுசர்ச்சனர் பரிதிமதியோடுங் கார்வாழி சாத்தாவாழி
சேதுமுதலிய கங்காநதிவாழி சேதுமன்னர் செங்கோல்வாழி
மாதுயருங்குருபர தாசன்வாழி அனுபூதிவாழிதானே.

திருச்சிற்றம்பலம்.

---

இராமேஸ்வரம் மேலக்கோபுர வாசலில் எழுந்தருளி இருக்கும்
சிவ சுப்ரமணிய சுவாமி பேரில்
அருணகிரிநாதர் பாடிய

# திருப்புகழ்.

வாலவயதாகியழ காகிமதனுகிபணி வாணிபமொடாடிமரு
ளாடிவிளையாடி வாழ்வுசதமாகிவலு வாகிமடகூடமொடு
பொருள்தேடி (க)

வாசபுழுகோடுமல ரோடுமனமாகிமகிழ் வாசனைகளாதியிட
லாகிமயலாகிவிலை மாதர்களைமேவியவ ராசைதனிலேசுழல
சிலநாள்போய்த் (உ)

தோல்திரைகளாகிநறை யாகிகுருடாகியிரு கால்கள்தடுமாறி
செவிமாறிபசுபாசபதி சூழ்கதிகள்மாறிசுக மாறிதடி யோடுதிரி
யுறுநாளில் (௩)

சூலைசொறியீளைவலி வாதமொடுநீரிழிவு சோகைகளமாலைசுர
மோடுபிணிதூறிருமல் சூழலுளமூலகசு மாலமென நாறியுட
லழிவேனோ (௪)

நாலுமுகனுதியரி யோமென அதாரமுரை யாதபிரமாவைசிர
மோதிபொருளோதுகென நாலுசிரமோடுசிகைதூளிபட தாளமிடு
மிளையோனே (௫)

நாரிதனிவேனிசிவ ரூபகலியாணிமுத லீனமகவாணைமகிழ்
தோளவனமீதுசெரிஞானகுறமாதைதினைக்காவில்மனமேபுகழ்
மயில்வீரா (௬)

ஓலமிடுதாடகை சுவாகுவளரேழுமறம் வாலியொடுநீலிபக
னொடொருவிராதனெழு மோதகடலோடுவிறல் ராவணகுழமமரில்
பொடியாக (௭)

ஊகைதழல்வாளிவிடு மூரிதனுநேமிவளை பாணிதிருமார்பனரி
மருகாவெனவே யோதமறை ராமேசுர மேவுகுமராவமரர்
பெருமாளே. (அ)

வேறு.

வானோர்வழுத்துனது பாதாரபத்மமலர்
　　மீதேபணிக்கும்வகை　　　　யறியாதே.　(௧)

மானேர்வலைக்கணதி லேதூளிமெத்தையினி
　　லூடேயணைத்துதவு　　　　மதனாலே.　(௨)

தேனேகரும்பிலெழு பாகோவிதற்கிணைக
　　ளேதோவெனக்கலவி　　　　பலகோடி.　(௩)

தீராமயக்கினொடு நாகாபடத்திலெழு
　　சேருடல்பெற்றதுய　　　　ரொழியேனோ.　(௪)

மேனாடுபெற்றவளர் சூராதிபற்கெதிரி
　　னேடேகிநிற்குமிரு　　　　கழலோனே.　(௫)

மேகாவுக்ரபதி தானேறிவெற்றிபுனை
　　வீரகுறச்சிறுமி　　　　மணவாளா.　(௬)

ஞானபரற்கினிய வேதாகமப்பொருளை
　　நானுதுணர்த்துமொரு　　　　பெரியோனே.　(௭)

நாராயணற்குமருகாவீறுபெற்றிலகு
　　ராமேச்சுரத்திலுறை　　　　பெருமாளே.　(௮)

திருப்புகழ்-முற்றிற்று.

---

இராமேஸ்வரம் புஸ்தகஷாப் நாகலிங்கம்பிள்ளை அவர்கள் பாடியது

## சேதுமாதவ சுவாமிபேரில் தோத்திரம்.

---

பதினாறடி விருத்தம்.

திருமருவு மார்பனே ஜெயலக்ஷ்மி லோலனே
　　தேவர்கள் துதிக்கின்ற பரனே
தேவாதி தேவனே கௌஸ்துவா பரணனே
　　திங்களொளி பரவு பாதா
பாரெலாந் துதிசெய்ய வேடந்தரித்துனது
　　பாத தாமரைகள் நோவப்

பக்தருளங் களிகூற மலர்மங்கை கைபிடித்
  தாண்டருள உளங்கனிந்து
பாண்டிய னிடத்திலே அடியுண்டு அவனையும்
  பாதுகாத் திடவேண் டியே
காட்சிதந் தெனைச்சதா காலமும் இவ்விதம்
  போற்று மடியார்கள் வேண்டும்
வரமது கொடுத்தெந்தனுளும் ரட்சிப்பனென
  வாக்களித் திட்ட பொருளே
தேவர் கின்னர ருரகர் மகரிஷிகள் சந்ததஞ்
  சேவையது செய்து நிற்க
ஜெயஜெயா வென்றுனது அடியவர்கள் வந்துநிதஞ்
  சேவையது கண்டு போற்ற
வேண்டுவர மளித்துனது மகிமையைப் புவியெலாம்
  மேவிடச் செய்த தேவே
வேதுஈவை யீண்டருள்ச் சீதாபிராமனென
  வேடந் தரித்து வந்து
வெகுகோடி பக்தர்களை ரட்சிக்க பூமிதனில்
  சேஷ சயனத்தை நீக்கி
தேவர்புகழ் ராமேச்சுரமேவு தேவனே
  சேதுமா தவ தேவனே.

முற்றிற்று.

---

## ஸ்ரீராமர் சீதைக்கு சேதுவைக்காட்டி அதின் மகிமை கூறல்.

விருத்தம்.

நிறமென்கூந்தற்சானகியே நின்னை அனுமான்கண்டுவந்த
பிறகுகவிகள் ஒருநாளுள் பெருக்கச்செயும்பேர் அணைபாராய்
உறுதிஆகஇதன்மகிமை உரைக்கமுடியாதானாலும்
சிறிதுமொழிவேன் எனராமன்சொல்வான் எடுத்துச்சொல்வானே.

தரு-மோகனராகம்-அடதாளசாப்பு.

பல்லவி.

இந்தச்சேதுவை கண்டாற்போமே சனகன்பெண்ணே
இகபரசித்தி ஆமே.

அநுபல்லவி.

சந்ததமும்மனதினிற் பிரியாதேசகல
பத்தினிகளும் தொழவரும்மாதே இந்த

சரணங்கள்.

1. தந்தையுடனே குருதெய்வ நிந்தனையும்-கதிரீஎன்று
தஞ்சம்அடைந்தவரைக்கெஞ்ச அடிக்கும்சற்பனையும்அகுதிகளை
அந்தணரைப்பசுவை மைந்தரைக்
கொல்லும் வேதனையும்-பஞ்சகாலத்தில்
அன்னமிட்டவரையுங்கன்னமிட்டிடும் வஞ்சனையும்பயப்படாமல்
நிந்தைஆனகள்ளைக் குடிப்பதும்-பசு
மங்கைஉரைஞ்சுகல்லை இடிப்பதும்-நடுச்
சந்திவிருட்சங்களை ஒடிப்பதும்-பிறர்
சொந்தப்பெண்களைக்கையைப் பிடிப்பதும்
நொந்தபேர்பொருளைக் கொண்டதோஷமும்
நோன்புகளைநடுவில் விண்டதோஷமும்
வந்தபேர்பசிக்க உண்டதோஷமும் இந்தச்

2. கேடுசெய்பவ ரோடுறவாகியநிலையும்-வயிற்றினிற்
பசிஎன்றிடவழக்கோரம் சொல்லியகெடுதலையும்-பாதிசாமத்தில்
வீடுகளில்மறைந்தோடி நெருப்பிடும்புலையும்-கண்ணிகள்குத்தி
விலங்கும் பறவைகளும் கலங்கிடவே
செயுங்கொலையும்-ஆணும் பெண்ணும்

கூடும்கூட்டுறவைப் பிறிப்பதும்-வழி
பாடுதப்பிநடக்கக் குறிப்பதும்-நடுக்
காடுகளிலேவெட்டிப் பறிப்பதும்-விளை

யாடும்பிள்ளைக்கழுத்தை முறிப்பதும்
நாடிக்கொடுப்பவரைத் தடுக்கும் பாவமும்
நாண் இழந்தபெண்ணுடன் படுக்கும் பாவமும்
கோடைக்குளத்தைத்துத்து விடுக்கும் பாவமும்
கோட்சொல்லிகுடிகளைக் கெடுக்கும் பாவமும் இந்தச்

3. மாலைஇட்டவனைஇகழ்ந்துசொல்லும்பாதகமும்-வேறொருவனை
மருவிஅதனில்வந்தகருவை அழிக்கும்தோசமும் பாலும்தேனும்
போல்இருப்பவரைக்கலைக்கும்மித்திர பேதகமும்-மாதவிடாய்
பூத்தமங்கையரைச் சேர்த்தணைத்தசூதகமும்-தருவேன் என்று

மேல்வர்களை அலைச் சழிப்பதும்-வழிச்
சாலைசத்திரங்களை அழிப்பதும்-செய்யும்
காலசெபத்தை ஒழிப்பதும்-இடும்
பாலேவீசரைப் பழிப்பதும்
எலும்இறைச்சிகளைத் தின்றதோஷமும்
இருட்டினில்இடம்இல்லை என்றதோஷமும்
ஆலயங்களிற்புணர் கின்றதோஷமும் (இந்தச்)

---

